பார்க்கும்போது ஒரு ஆண்டுகூட பாக்கியில்லாமல் பூராவையும் பரிசீலனை செய்து முடித்திருக்கிறது. பப்ளிக் அக்கவுண்ட்ஸ் கமிட்டியின் தரமும் அதிகமாகயிருந்து அதிகாரிகள் பப்ளிக் அக்கவுண்ட்ஸ் கமிட்டியின் முன் சாட்சியம் கொடுக்கிறபோதும் கூட கவலையோடும் அச்சத்தோடும் கொடுத்திருப்பதைப் பார்த்திருக்கிறேன். பப்ளிக் அக்கவுண்ட்ஸ் கமிட்டி செய்யக்கூடிய சிபார்சுகள்மீது எடுக்கக்கூடிய நடவடிக்கைகள் நன்ருகயில்லையென்று சொல்லலாம். சொந்த அனுபவத்தை வைத்து சொல்லவில்லை. பப்ளிக் அக்கவுண்ட்ஸ் கமிட்டி சிபார்சுமீது, சென்ற ஐந்தாண்டுகளில் என்னென்ன யோசனைகள் கொடுக்கப்பட்டன, அவைகள்மீது என்னஎன்ன நடவடிக்கைகள் எடுக்கப்பட்டது என்று ஒரு ஆண்டுக்குள்ளாக புதுக் கமிட்டி முன்பு சமர்ப்பிக்க நிதியமைச்சர் அவர்கள் ஏற்பாடு செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** கனம் சபாநாயகர் அவர்களே, இந்த பப்ளிக் அக்கவுண்ட்ஸ் கமிட்டியில் அங்கத்தினர் அவர்களும் ஒரு உறுப்பினராகயிருக்கிருர்கள் என்று நினைக்கிறேன். ஆகவே முதல் கூட்டத்தில் இப்பிரச்னைகளை அவர் எழுப்பினல் அவற்றையெல்லாம் கவனித்து எப்படி எப்படி செய்ய வேண்டுமோ அப்படி செய்யலாம். அவர்கள் சொல்வதை பரிசீலனை செய்யலாம்.

MR. SPEAKER : The question is—

'That this House recommends to the Legislative Council that they do nominate five Members of the Council to associate with the Committee on Public Accounts of this House for the year 1962–63 and communicate to this House the names of the Members so nominated.'

The motion was put and carried.

## VII.—THE MADRAS STATE ELECTRICITY BOARD BUDGET FOR 1962–63.

* **THE HON. SRI R. VENKATARAMAN :** கனம் சபாநாயகர் அவர்களே, தமிழ்நாடு மின்சார சபையின் 1962-63-ம் ஆண்டிற்கான ஆண்டு நிதி நிலை அறிக்கையும் 1961-62-ம் ஆண்டுக்கான துணை நிதி நிலை அறிக்கையும் இச்சபையின் முன் சமர்ப்பிக்கப்பட்டுள்ளன. அவற்றை இப்போது விவாதத்திற்கு எடுத்துக்கொள்ள வேண்டும் என நான் பிரேரேபிக்கிறேன்.

**SRI M. KALYANASUNDARAM : On a point of order, Sir.** கனம் தொழில் அமைச்சர் அவர்கள் மின்சார சபையின் வரவு-செலவு கணக்குகளை இந்த சபையில் முதலில் விவாதித்திருக்க வேண்டும். நிதி சம்பந்தமான பிரச்னை எதுவாகயிருந்தாலும் முதலிடம் இந்த சபைக்குத்தான் கொடுத்திருக்க வேண்டுமே தவிர தொழில் அமைச்சர் அவர்கள் அந்த சபை அங்கத்தினராக இருக்கிற காரணத்தினலோ என்னவோ அங்கு முதலில் விவாதத்திற்கு

எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். பல முக்கிய காரியங்களை அங்கு சமர்ப்பித்திருக்கிறார்கள். கௌன்ஸிலில் முதலில் இது விவாதத்திற்கு வந்திருப்பதானது, இந்த சபைக்கு கொடுக்கவேண்டிய முக்கியத்துவம் கொடுக்கப்பட்டதாக கருதப்பட மாட்டாது என்று நான் தங்கள் கவனத்திற்கு கொண்டு வருகிறேன். இனி இம்மாதிரி நிகழ்ச்சிகள் நடக்காதபடி பார்த்துக்கொள்ள சபா நாயகர் அவர்களை கேட்டுக் கொள்கிறேன்.

**THE HON. SRI R. VENKATARAMAN :** கனம் சபாநாயகர் அவர்களே, கல்யாணசுந்தரம் அவர்கள் பழைய மெம்பர், அனுபவம் வாய்ந்தவர், சட்டம் தெரிந்தவர், அரசியல் சட்டம் படித்தவர் என்பதெல்லாம் நமக்குத் தெரியும். பட்ஜெட் விவாதம் தான், இந்த சபையிலே நாம் முதலில் நடத்தவேண்டும். இந்த நிதிநிலை அறிக்கை எந்தவிதமான ஓட்டுக்கும் உட்பட்டதல்ல. எலெக்ட்ரிஸிட்டி சப்ளை ஆக்ட் செக்ஷன் 61 (3)-ல்

'The State Government shall, as soon as may be after the receipt of the Statement, cause it to be laid on the table of the House or as the case may be of Houses of the State Legislature and the said statement shall be open to discussion therein but shall not be subject to vote.'

என்றிருக்கிறது. ஆக எந்தவிதமான ஓட்டுக்கும் இது உட்பட்டதல்ல. பட்ஜெட் சம்பந்தமான பண வரவு செலவை, எந்த சபைக்கு கொடுக்க அதிகாரமிருக்கிறதோ அதைத்தான் அந்த சபையில் விவாதிக்கவேண்டுமென்பது இச்சட்டத்தின் உட்கருத்து. இரண்டாவதாக நமது ராஜ்ய சபையில் பலமுறை இந்த விவாதம் கௌன்ஸிலில் முதலில் நடந்திருக்கிறது, என்று தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். ஆக, இதில் உரிமைப் பிரச்னை ஒன்றுமில்லையென்று சமர்ப்பித்துக்கொள்ள விரும்புகிறேன்.

**SRI M. KALYANASUNDARAM :** அமைச்சர் அவர்கள் அவர்களது அபிப்பிராயத்தைக் கூறினார்கள். இத் தீர்மானத்தை பிரேரேபிக்கும் அமைச்சர் அவர்களின் சம்பளத்தையும் இந்த சபைதான் அனுமதிக்கிறது. சட்டத்தை அவர்கள் அர்த்தப்படுத்துகிறார்களே தவிர நிதி சம்பந்தமான எல்லாப் பிரச்னைகளும் முதலிலேயே இந்த சபையில் எடுக்கவேண்டியது அவசியம். எற்கனவே ஒரு தடவை ஆட்சேபணை இல்லாமல் அனுமதிக்கப்பட்டிருக்கிறது என்று கூறினார்கள். அந்த முறை கௌன்ஸில்கூட வசதியில்லை என்று காரணம் சொன்னதால் அம்முறை அனுமதிக்கப்பட்டது. தொடர்ந்து அது பழக்கமாக வந்து விடக்கூடாது என்று அவர்கள் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன்.

**MR. SPEAKER :** I think there is no point of order arising out of this. The Hon. Minister for Industries can continue his speech.

**THE HON. SRI R. VENKATARAMAN :** இந்த நிதி நிலை அறிக்கை சம்பந்தமாக என்னுடைய பேச்சை அச்சு ரூபமாகப் போட்டு நேற்றையதினமே அங்கத்தினர்களுக்கு விநியோகம்

[Sri M. Kalyanasundaram] [5th May 1962

செய்துவிட்டேன். அவ்வாறு கொடுப்பதற்குக் காரணம் என்ன வென்று சொன்னால் அங்கத்தினர்கள் எல்லோரும் இதிலுள்ள விவரங்கள் எல்லாவற்றையும் நன்றாக படித்து பேசுவதற்கு வாய்ப்பு கொடுக்கவேண்டுமென்ற காரணத்திற்காக முதல் நாளே எல்லா அங்கத்தினர்களுக்கும் இதை விநியோகம் செய்யும்படி அசெம்பிளி செக்ரட்டேரியட்டை கேட்டுக்கொண்டேன். இருந்தாலும் இந்த நிதிநிலை அறிக்கை சம்பந்தமாக உங்கள் முன்பு ஒரு சில கருத்துக்களை மட்டும் நான் சொல்ல விரும்புகிறேன். இந்த மின்சார இலாகாவானது ராஜ்ய இலாக்காக்களில் ஒன்றாக 1928-ல் செய்யப்பட்டது. அதற்கு முன்பு ஏதோ சில லைசென்ஸிகள் மின்சாரம் உற்பத்தி செய்வதை நடத்தி வந்தார்கள். இதை ஒரு இலாகாவாக செய்த பிறகு பல்வேறு துறைகளில் திட்டங்கள் வகுத்து ராஜ்யத்தில் மின்சார சப்ளையை அதிகரிப்பதற்கான பல ஏற்பாடுகளைச் செய்தோம். அதன் பிறகு 1948-ம் ஆண்டில் மத்திய அரசாங்கத்தில் எலெக்ட்ரிசிட்டி சப்ளை ஆக்ட் என்ற சட்டத்தை நிறைவேற்றினார்கள். அந்தச் சட்டப்படி மின்சார உற்பத்தி, வினியோகம் இவையெல்லாம் தனியாக அமைக்கப்பட்டதொரு போர்ட் இடம் விடப்படவேண்டுமென்று அவர்கள் குறிப்பிட்டார்கள். அச்சட்டத்திற்கிணங்க 1957-ம் வருடத்தில் மின்சார போர்ட் ஒன்றை அமைத்தோம். தலைவர் உட்பட 5 அங்கத்தினர்களைக் கொண்ட போர்ட் இது செக்ஷன் 16 ப.. இதற்கு ஆலோசனை சொல்ல பொதுமக்கள் பிரதிநிதி, அரசாங்கப் பிரதிநிதி இப்படி எல்லோரும் அடங்கிய ஆலோசனைக் குழு ஒன்றிருக்கிறது. ராஜ்ய சர்க்காரிலிருந்து போர்ட்டுக்கு இதை மாற்றும் போது அதுவரையில் எவ்வளவு தொகை இதற்காக செலவழிக்கப்பட்டிருக்கிறதோ அதை கடனாக போர்ட்டுக்கு கொடுத்ததாக கணக்குகளை மாற்றிக் கொண்டோம். அவ்வாறு மாற்றிக் கொண்டபோது இந்த 71 கோடி ரூபாயும் ராஜ்ய சர்க்கார் கொடுத்த கடனாக கொள்ளும்படி வகை செய்யப்பட்டது. அதற்குப் பிறகு இந்த 71 கோடி ரூபாய்க்கும் 5¼ சத விகிதம் வட்டி கொடுக்க வேண்டும் என்றும் அப்போது நிர்ணயிக்கப்பட்டது. அதற்குப் பிறகு கடந்த ஐந்து ஆண்டுகளில் 1957-வது வருஷத்திலிருந்து 1962-வது வருஷம் வரையிலும் 47·84 கோடி ரூபாய் மின்சார போர்டுக்கு ராஜ்ய சர்க்கார் கடன் கொடுத்திருக்கிறது. கடந்த ஆண்டு அதாவது 1962-63-க்கு 11½ கோடி கடனாக கொடுக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அதோடு இப்போது இருக்கின்ற போர்டின் கணக்குகள் எல்லாம் தனியாக பிரிந்து, தனியாக ஒரு அக்கௌன்ட் செக்ஷன் வைக்க வேண்டும் என்றும், அதற்கான பூர்வாங்க ஏற்பாடுகள் எல்லாம் செய்து அதற்கான நடவடிக்கைகள் எல்லாம் எடுத்துக்கொண்டு வருகிறோம். கணக்குகளை எடுத்துக்கொண்டால் போர்டை பொறுத்தவரையில் தனியாக வைத்துக்கொள்வதால், ராஜ்ய சர்க்காருடைய கணக்கோடு சேர்த்துப் பார்க்காமல் தனியாக போர்டு இயங்குவதற்கு வசதியாக இருக்கும் என்றும் தீர்மானிக்கப்பட்டது. இந்த ராஜ்யத்தில் இப்போது இரண்டு தர்மல் ஸ்டேஷன், அதாவது அனல் மின்சார நிலையங்களும், ஏழு நீர்

5th May 1962] [Sri R. Venkataraman]

வீழ்ச்சி நிலையங்களும் ஆக 9 நிலையங்கள் இருக்கின்றன. அவற்றி னுடைய மொத்த மின்சார உற்பத்தி 5 லட்சம் 71 ஆயிரம் கிலோ வாட்ஸ் மின்சார சக்தியாகும். மூன்ருவது திட்டத்தில் இதற்காக 100 கோடி 19 லட்சம் ரூபாய் செலவழிப்பதற்கு திட்டம் வகுக்கப் பட்டிருக்கிறது. இந்த 100 கோடி 19 லட்சம் செலவு செய்வதில் அதிகமாக 5 லட்சம் 60 ஆயிரம் கிலோவாட்ஸ் மின்சார சக்தி உற்பத்தி செய்யவேண்டும் என்று ஏற்பாடு செய்யப்பட்டிருக் கிறது. அவ்வாறு உற்பத்தி செய்தால் நம்முடைய ராஜ்யத்தில் 11 லட்சம் 31 ஆயிரம் கிலோவாட்ஸ் மின்சார சக்தி மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இறுதி காலத்தில் கிடைக்கும். மூன்ரு வது திட்டத்தில் வகுத்திருக்கின்ற திட்டங்கள் குந்தா ஹைட்ரோ எலக்ட்ரிக் ஸ்கீம்—மின் மூன்ருவது ஸ்டேஜ், இதற்கு இரண்டு லட்சம் 45 ஆயிரம் கிலோவாட்ஸ் சக்தி, மேட்டூர் டன்னல் ஸ்கீம் 1 லட்சம் கிலோவாட்ஸ் மின்சார சக்தி, பெரியார் ஹைட்ரோ எலக் ட்ரிக் ஸ்கீம் 35 ஆயிரம் கிலோவாட்ஸ் சக்தி, பரம்பிகுளம் ஹைட்ரோ எலக்ட்ரிக் ஸ்கீம் 1 லட்சம் 80 ஆயிரம் கிலோவாட்ஸ் சக்தி, ஆக மொத்தம் 5 லட்சம் 60 ஆயிரம் கிலோவாட்ஸ் சக்தி அதிகரிக்கப் படும். இதைத்தவிர நெய்வேலியிலிருந்து நமக்கு மூன்ருவது திட்டத்தில் சற்றேறக்குறைய 2 லட்சம் 26 ஆயிரம் கிலோவாட்ஸ் மின்சார சக்தி கிடைக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. மூன்ருவது திட்டத்தில் நம்முடைய ராஜ்யத்தில் இன்னும் 8 ஆயிரம் கிராமங்களுக்கு மின்சாரம் விஸ்தரிக்கப் படவேண்டும் என்று நாம் திட்டம் வகுத்திருக்கிருேம். அதோடு ஹை-டென்ஷன் லைன் 8,000 மைல்களுக்கு போடப்பட வேண்டும் என்றும், இன்னும் புதிதாக 75 ஆயிரம் பம்பு செட்டுகள் விஸ்தரிக்கப்பட வேண்டும் என்றும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. 1961-62-ம் வருஷத்தில் நாம் நிறைவேற்றிய தீர்மானத்தைப் பார்ப்போமேயானுல், நாம் அந்த ஆண்டு 15 கோடி 23 லட்சம் ரூபாய் செலவழிப்பதாக இருந் தோம். ஆனுல் 17 கோடி 88 லட்சம் ரூபாய் செலவு செய்திருக் கிருேம். 1,200 கிராமங்களுக்கு மின்சார விஸ்தரிப்பு கொடுக்க வேண்டும் என்று திட்டம் போட்டோம். ஆனுல் 1,880 கிராமங் களுக்கு நாம் மின்சாரத்தை விஸ்தரித்திருக்கின்ருேம். மொத்தத் தில் தமிழகத்தில் பன்னிரண்டாயிரத்து அறுநூற்று முப்பத்தி எட்டு (12,638) கிராமங்களுக்கு மின்சாரம் விஸ்தரிக்கப்பட்டிருக் கின்றது என்பதை நான் மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொள் கிறேன். அதேபோல் விவசாயத்திற்கு பம்பு செட்டுகள் கொடுப் பதிலும் பதினைந்தாயிரம் பம்பு செட்டுகள் கொடுப்பது என்று திட்டமிட்டிருந்தோம். ஆனுல் இருபத்திரெண்டாயிரம் (22,000) பம்பு செட்டுகள் 1961-62-ம் ஆண்டில் நாம் கொடுத்திருக்கின்ருேம்.

அடுத்தபடியாக, நாம் மேற்கொண்டிருக்கிற திட்டங்களில் குந்தா திட்டத்தின் மூன்ருவது ஸ்டேஜ் பகுதி மிகவும் முக்கிய மானது. அதன் மூலமாக, 2 லட்சத்தி 45 ஆயிரம் கிலோவாட்ஸ் சக்தி உற்பத்தி செய்யப்படும். இதற்கு கொழும்பு திட்டத்தின் கீழ் கானடா ராஜ்யத்திலிருந்து கிடைக்கக்கூடிய உதவி 220 லட்சம் டாலர்கள். இதை உபயோகித்து இந்தத் திட்டத்தை வெற்றிகரமாக நாம் நிறைவேற்ற முடியும் என்று எதிர்பார்க் கின்ருேம்.

[Sri R. Venkataraman] [5th May 1962

அடுத்ததாக, முக்கியமாக இருக்கின்ற திட்டம் மேட்டூர் டன்னல் திட்டம். இப்போது விவசாய காலங்களில் தண்ணீர் மேட்டூர் அணையிலிருந்து விடப்படுகிறது. இப்போது அந்த தண்ணீர் மின்சார உற்பத்தி செய்யாத முறையில் போய்க் கொண்டிருக்கின்றது. அதை பயன்படுத்தி அதிகம் மின்சார உற்பத்தி செய்வதற்குத்தான் இந்த டன்னல் திட்டம் ஏற்படுத்தப் பட்டு, அதன் மூலம் மின்சார உற்பத்தி செய்வதற்கு வழிவகை செய்துள்ளோம். அதே போல் பெரியாறு திட்டத்தில் இன்னமும் ஒரு நான்காவது பென்-ஸ்டாக் போட்டு ஒரு புதிய ஜெனரேட்டர் ஸ்தாபித்து அதன் மூலம் 35 ஆயிரம் கிலோவாட்ஸ் உற்பத்தி செய்வதற்கு வழி செய்யப்படும். பரம்பிக்குளம் திட்டத்திலே நாம் எடுத்துக் கொண்டிருக்கிற முயற்சிகள் எல்லாம் சற்று நல்ல முன்னேற்றத்தில் வந்திருக்கின்றது என்பதை இந்தச் சந்தர்ப் பத்தில் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். நேற்று முந்தின நாள், நமது மின்சாரத்துறை சீப்-இன்ஜினியர் அவர்கள் மத்திய சர்க்காரிலிருந்து, சென்ட்ரல் வாட்டர் பவர் கமிஷனோடு விவாதம் செய்து பரம்பிக்குளம் திட்டத்திற்கு டெக்னிக்கல் அப்ரூவல் வாங்கிக்கொண்டு வந்திருக்கிறார்கள் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். அனல் மின்சார நிலையத் தைப் பொறுத்தவரையில், பேசின்பிரிட்ஜில் இன்னொரு பெரிய பாய்லர் ஏற்படுத்தவேண்டும் என்று திட்டம் வகுத்திருக்கின்றோம். இதைத் தவிர நீர்த் தேக்கங்களில் நீரை எவ்வளவு தேக்கி வைக்க முடியுமோ அவ்வளவையும் தேக்கி வைத்து, அதன் மூலம் மின்சார தடையில்லாமல் எப்போதும் மின்சாரம் கொடுப்பதற்கு வழி செய்ய முடியும் என்று கருதி, அதற்காக சந்திநல்லா ரிசர்வாயர் திட்டத்தை எடுத்துக்கொண்டோம். நம்முடைய ராஜ்யத்தில் உற்பத்தி செய்கின்ற மின்சாரம் இன்னும் அண்டை ராஜ்யங்களில் இருக்கின்ற மின்சார நிலையங்கள் எல்லாவற்றையும் ஒன்றாக இணைத்துவிட்டால், எந்தெந்த ராஜ்யங்களில் எப்பொழுதெல்லாம் தேவைப்படுகிறதோ அதற்குத் தகுந்தவாறு பரிமாறிக்கொள்ளவும் ஒருவருக்கொருவர் மின்சாரத்தைப் போதிய அளவில் உபயோ கித்துக்கொள்ளவும் வழி ஏற்படும் என்ற எண்ணத்தோடு, இந்த நான்கு ராஜ்யங்களையும் இணைக்கவேண்டுமென்ற ஒரு அபிப் பிராயம் நான்கு ராஜ்யங்களிலும் இருந்து வருகிறது. அதற்கான ஏற்பாடுகளும் நடந்து வருகின்றன. தமிழகத்திலிருந்து மைசூருக்கும் அதே போல் ஆந்திர பிரதேசத்திற்கும் கேரளா வுக்கும் நம்முடைய 230 கிலோவாட்ஸை எடுத்துக்கொண்டு அவர் களுடைய எல்லை வரையிலும் போட வேண்டும் என்று நம்முடைய மூன்றாவது திட்டத்தில் வகுத்திருக்கிறோம். அதற்காக 230 லட்சம் ரூபாய் செலவழிப்பதற்கும் நாம் பணம் ஒதுக்கியிருக்கிறோம். நம்முடைய ராஜ்யத்தில் ஏராளமாக கிராமப்புறங்களுக்கு மின் சாரத்தை விஸ்தரிக்கவேண்டும் என்ற எண்ணம் பரவலாக இருந்து வருகிறது. அதே சமயத்தில் புதிதாக, பெரிய தொழிற் சாலைகள் வருகின்றன. இப்படி வரும்போது, கிராமங்களுக்கு கொடுப்பதா, அல்லது புதிய தொழிற்சாலைகளுக்குக் கொடுப்பதா என்கிற கேள்விக்கு இடமில்லாத வகையில் இரண்டுக்கும் கொடுக்க வேண்டும் ,என்ற எண்ணத்தில் ராஜ்யத்தில் சர்க்கார் வேண்டிய

5th May 1962] [Sri R. Venkataraman]

முயற்சிகள் எடுத்துக்கொண்டிருக்கின்றன. இந்த இரண்டு பிரிவு களுக்கும் மின்சாரம் கொடுக்கவேண்டும் என்ற நிலைமை இருக் கின்ற காரணத்தால், பல விதமான நிர்ப்பந்தங்கள், ரெஸ்ட்ரிக் ஷன்ஸ், குரூப் ஸிஸ்டம் இவைகள் எல்லாம் ஏற்படுகின்றன. இதை ஆலோசனை செய்து தான், ஒரு நாளில் 24 மணி நேரம் உற்பத்தி செய்யப்படுவதை சில மணிநேரம் ஒரே இடத்தில் உபயோகிப் பதைவிட, அதை பலநேரங்களில் பல இடங்களில் கொடுத் தால், இன்னும் அதிகமான நன்மை கிடைக்கும் நிலைமை யும் ஏற்படுகின்றது. இருக்கின்ற மின்சார சக்தியை வைத்துக் கொண்டு, இரவு பகல் என்று பாராமல் எல்லா இடங்களுக்கும் கொடுத்துவருவதின் காரணமாக நமக்கிருக்கின்ற மின்சார சக்தியை இன்னும் விரிவாக பயன்படுத்திக்கொள்ள முடியும். ஆகவே தான் இந்தவிதமான நிர்பந்தங்கள் செய்யவேண்டியிருக் கின்றது. கனம் அங்கத்தினர்கள் இதைச் சற்று ஆலோசித்துப் பார்த்து, இந்த நிர்ப்பந்தங்கள், ரெஸ்ட்ரிக்ஷன்ஸ் எல்லாவற்றை யும் உடனடியாக எடுத்துவிடவேண்டுமென்று சொன்னால், அதனால் ஏற்படக்கூடிய விளைவு என்ன என்று ஆலோசித்து, அவர் களுடைய அபிப்பிராயங்களைக் கூறும்படி கேட்டுக்கொள்கிறேன். என்றாலும் கொஞ்சம் கொஞ்சமாக நமது மின்சார உற்பத்தி அதிகரித்துக்கொண்டு வரும்போது, இப்போது இருக்கும் நிர்ப் பந்தங்கள் எல்லாவற்றையும் நீக்கி, அதோடு இப்போது விவசாயத் திலே குறைந்த பட்ச கட்டணம் கட்டவேண்டுமென்று உத்தர வாதம் கொடுத்து வருகிறார்களே அதையும் மாற்றி, குறைத்துக் கொள்ள வழிகள் செய்யப்படும் என்று இந்தச் சபையின் முன்பு சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

நம் ராஜ்யத்தில் இருக்கக் கூடிய மின்சார சக்தி நீர் வீழ்ச்சி யிலிருந்து கிடைக்கக் கூடிய காரணத்தினால் இதற்கு ஒரு பெரிய குறைபாடு இருக்கிறது. மழை காலத்திலே நீர் வீழ்ச்சிகளி லிருந்து நீர் கிடைக்கும்போது போதிய அளவு மின்சாரம் உற்பத்தி செய்கிறோம். மழை தட்டுப்பாடு ஏற்பட்டாலும், கோடை காலம் வரும்போதும், உற்பத்தி குறையும் நிலைமை ஏற்பட்டு அதன் காரணமாக நாம் மின்சார வெட்டுகள் கொண்டு வரக் கூடிய நிலைமையும் இருந்து வந்திருக்கிறது. ஆனால் இந்த வருஷத்தில் எந்த விதமான மின்சார வெட்டும் இல்லாத முறையில் சமாளிக்க முடியும் என்று நான் சந்தோஷத்தோடு தெரிவித்துக் கொள்கிறேன். இப்போது நீர்த் தேக்கங்களில் இருக்கக் கூடிய நிலைமையினாலும், மழை காலம் நெருங்கி விட்ட காரணத்தினாலும் இந்த வருஷத்தில் மின்சார வெட்டு இல்லாத நிலைமையை உண்டாக்கி விடமுடியும்.

இந்த அளவுக்கு நம் ராஜ்யத்தில் மின்சார உற்பத்தி அதிகரித் திருக்கிறது என்பதையும் நான் தாழ்மையோடு தெரிவித்துக் கொள்கிறேன். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட இறுதியில் நமக்கு எவ்வளவு மின்சாரம் தேவைப்படும் என்பதை நாம் ஒரு மதிப்பீடு செய்திருக்கிறோம். என்னென்ன தொழில்களுக்கு லைஸென்ஸுகள் வழங்கப்பட்டிருக்கின்றன, எந்த அளவிலே விவசாயத்திலே இது

[Sri R. Venkataraman] [5th May 1962

வரையில் மின்சாரம் உபயோகிக்கப்பட்டு வருகிறது, சிறு தொழில்கள் வளர்ச்சிக்கு எவ்வளவு தேவை என்று மதிப்பீடு செய்து பார்த்ததில், மூன்ருவது ஐந்தாண்டுத் திட்ட இறுதியில் 15,79,000 கி.வா. நமக்குத் தேவை என்று கணக்கிட்டிருக்கிருர்கள். அதேபோல நமக்கு எவ்வளவு உற்பத்தி இருக்கும், மூன்ருவது ஐந்தாண்டுத் திட்ட இறுதியில் எவ்வளவு நாம் நிரந்திரமாகக் கொடுக்க முடியும் என்று கணக்குப் பார்த்ததில் 913,000 கி.வா. அளவுக்குத் தான் கொடுக்க முடியும் என்ற நிலைமை இருக்கிறது. அதைப் பார்க்கிறபோது, நம் ராஜ்யத்திலே ஏறக்குறைய 666,000 கி. வா. மின்சாரசக்தி பற்ருக்குறை ஏற்படும் என்ற நிலைமை இருக்கிறது. ஆகவேதான் நாம் மிகவும் கண்காணிப்பாக, விழிப்போடு, இருக்கவேண்டும். இதைப் பூர்த்தி செய்ய மைசூர் ராஜ்யத்திற்கும் நம் ராஜ்யத்திற்கும் எல்லையில் உள்ள ஹொகெனக்கல் திட்டத்தை நிறைவேற்றவேண்டுமென்று ராஜ்ய சர்க்கார் நினைத்துக்கொண்டிருக்கிறது. அதை நிறைவேற்றிஞல், அதிலிருந்து 800,000 கி.வா. உற்பத்தி செய்ய முடியும். அது மாத்திரமல்ல. சமீபத்திலே நிகழ்ந்த வெள்ளம் போன்ற நிலைமை ஏற்படாமல் தடுக்க உதவிகரமாகவும் இருக்கும். ஆகவே, ஹொகெனக்கல் திட்டத்தை நிறைவேற்றுவதில் மைசூர் ராஜ்யம் ஒத்துழைக்கும் என்று நான் நம்புகிறேன். அவர்களுடன் கலந்து ஆலோசித்து இந்தத் திட்டத்தை கூடுமாஞல்—சாத்தியமாஞல்—மூன்ருவது திட்டத்திலேயே நடத்திவிடவேண்டுமென்று ராஜ்ய சர்க்கார் யோசனை செய்துகொண்டிருக்கிறது. அந்த மின்சாரம் கிடைத்தால் கூட, நம்முடைய ராஜ்யத்தில் எல்லாம் நீர்விழ்ச்சி மின்சாரமாக இருக்கிற காரணத்திஞல், அது "ஃபேர்ம் பவர்" என்று சொல்லுகிற—நிரந்தரமாகக் கிடைக்கக் கூடிய—மின்சார சக்தியாக இருக்க முடியாது. ஆகையால் நம் ராஜ்யத்திலிருந்து பல முறை மத்திய சர்க்காருக்கு எழுதியிருக்கிருேம்—அணு மின்சார நிலையத்தை தமிழகத்தில் வைக்கவேண்டுமென்று வற்புறுத்தியிருக்கிருேம். இவ்வாறு நாம் கேட்டுக்கொண்டிருப்பதன் விளைவாக மத்திய சர்க்காரிலிருந்து எந்த இடத்தில் அணு மின்சார நிலையம் அமைக்க முடியும் என்று யோசனை செய்து பரிசீலனை செய்வதற்காக ஒரு கமிட்டி அமைத்து அவர்களை எல்லா இடங்களையும் சுற்றிப் பார்க்க வரும்படியாக கூறியிருக்கிருர்கள். அந்த அடிப்படையில் இப்போது சென்னை ராஜ்யத்திலும் அவர்கள் இரண்டு இடங்களை சுற்றிப் பார்த்து வந்திருக்கிருர்கள். முடிவில் தமிழகத்தில் இந்த அணு மின்சார நிலையத்தை வைப்பார்கள் என்று நான் நம்புகிறேன். காரணம் என்னவென்று சொன்ஞல், நம் ராஜ்யத்தில் கிரிட் ஸிஸ்டம் மிகவும் நன்ருக இருக்கிறது. எல்லா இடங்களுக்கும் நாம் லைன்களையெல்லாம் போட்டு வைத்திருக்கிருேம். நம் ராஜ்யத்திலிருந்து பிற ராஜ்யங்களுக்குக் கொடுக்க வேண்டுமென்று சொன்ஞல்கூட, நம் ராஜ்யத்திலிருந்து தான் பிற ராஜ்யங்களுக்குப் போகும் நிலைமை இருக்கிறது. எல்லாவித நன்மைகளையும், சௌகரியங்களையும் ஒட்டிப் பார்க்கும் போது நம் ராஜ்யத்தில் வைப்பது மிகவும் பொருத்தமாக இருக்கும் என்று நான் நம்புகிறேன்.

5th May 1962] [Sri R. Venkataraman]

மின்சாரக் கட்டணங்களைப் பற்றி ஓரிரண்டு வார்த்தைகள் சொல்லவேண்டும். மின்சாரக் கட்டணங்கள் 1959-ம் வருஷத்தில் தான் புதிதாக நிர்ணயிக்கப்பட்டது. அவ்வாறு நிர்ணயிக்கப் பட்டதில் சென்னை நகரத்திற்கும் அதன் சுற்றுப்புற வட்டாரங் களுக்கும் நிர்ணயிக்கப்பட்டிருக்கிற கட்டணம் நீர்வீழ்ச்சி மின்சாரம் வழங்கப்படுவதற்கு வாங்கப்படுகிற கட்டணத்தைவிட உயர்வாக இருக்கிறது. காரணம் என்ன என்றால், சென்னையிலும், மதுரையிலும் நாம் அமைத்திருக்கிற அனல் மின்சாரத்திற்கு நிலக்கரி தேவையாக இருக்கிறது. போதுமான அளவு நிலக்கரி வருவதற்கு செலவு ஆகிறது. அந்தச் செலவை ஈடுகட்ட சென்னை யில் இருக்கிற தொழிற்சாலைகளிடமிருந்து ஓரளவுக்கு அதிகமாகக் கட்டணம் வசூல் செய்யப்படுகிறது. அப்படி வசூல் செய்யப் பட்டாலும் ஒரு நன்மைகூட சென்னையைச் சுற்றி இருக்கக்கூடிய வட்டாரங்களுக்கு இருக்கிறது. மற்ற இடங்களில் நீர் வீழ்ச்சி மின்சாரத்திற்கு வெட்டு ஏற்படும்போது அனல் மின்சாரத்திற்கு வெட்டு கொண்டுவருவதில்லை. ஆகையால் அவர்களுக்கு ஏதோ தவறு இழைத்துவிட்டதாக அவர்கள் நினைக்கத் தேவையில்லை என்று தெரிவித்துக்கொள்கிறேன். என்றாலும் இப்போது புதிதாக நெய்வேலியிலிருந்து 226,000 கி.வா. சக்தி வர இருக்கிறது. அது வரும்போது, அதன் விலை, அனல் மின்சாரத்தின் விலை எல்லா வற்றையும் ஒன்றாக்க் கணக்கிட்டு நியாயமான ஒரு கட்டணத்தை நிர்ணயிக்க வேண்டிய அவசியம் கூடிய சீக்கிரம் ஏற்படும் என்று நான் நினைக்கிறேன். அந்த விதமாக மின்சாரம் நெய்வேலி யிலிருந்து கிடைக்கும்போது கட்டணத்தை புனரமைப்பு செய் வதைப் பற்றி பரிசீலனை செய்யப்படும்.

நம் ராஜ்யத்திலே மின்சாரத்தை வினியோகம் செய்ய எட்டு கம்பெனிகள் இருக்கின்றன, ஐந்து ஸ்தல ஸ்தாபனங்கள் இருக் கின்றன. 100-க்கு 85 பங்கு மின்சார போர்டுதான் மின்சாரத்தை வினியோகம் செய்கிறது. எஞ்சியிருக்கிற 15 சத விகிதம் மின்சாரத்தை 8 கம்பெனிகளும், 5 ஸ்தல ஸ்தாபனங்களும் இன்று வரை விநியோகம் செய்து கொண்டிருக்கின்றன. இது நம் எல்லோருக்கும் தெரிந்த ஒரு உண்மை. கம்பெனிகள் வினியோகம் செய்கிற இடத்தில் ஏற்பட்டிருக்கிற முன்னேற்றம், போர்டு எடுத்துக்கொண்டு செய்கிற இடத்தில் ஏற்பட்டிருக்கிற முன்னேற் றத்தைவிட மிக மிகக் குறைவாக இருக்கிறது என்பது. இதற்குக் காரணம் கம்பெனிகளுக்கும் ஸ்தல ஸ்தாபனங்களுக்கும் போதிய அளவு நிதி வசதி இல்லை, அதனால்தான் அவர்கள் விஸ்தரிக்க முடியவில்லை என்று அடிக்கடி சொல்லப்படுகிறது. இந்தக் குறை யை நீக்குவதற்கு மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே கம்பெனி களுக்குக் கடன் கொடுக்க இரண்டு கோடி ஒதுக்கப்பட்டிருக் கிறது. 1961-62-ம் வருஷத்தில் 25 லட்சம் கடன் கொடுத்தோம். 1962-63-ம் வருஷத்திற்கும் . . . . (திரு. எம். கல்யாணசுந்தரம் குறுக்கீடு) கனம் அங்கத்தினர் பேசும்போது எடுத்துக் கூறினால் நான் மறுபடியும் பதிலளிக்கும்போது அவைகளுக்கு பதில் சொல்லுகிறேன். இந்த ஆண்டு நாம் 25 லட்சம் ரூபாய் ஒதுக்கி யிருக்கிறோம்.

கடைசியாக மின்சார போர்டுக்கும், தொழிலாளர்களுக்கும் உள்ள உறவைப் பற்றி சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். மின்சார போர்டு இந்த விஷயத்தைப் பரிசீலனை செய்து ராஜ்ய சர்க்கார் பே கமிஷனில் என்ன சலுகைகள், கூலி உயர்வுகள் கொடுத்தார்களோ, அதையே மின்சார போர்டில் இருக்கக் கூடிய தொழிலாளர்களுக்கும் கொடுக்கவேண்டுமென்று முடிவு செய்து அவர்கள் அதே விதத்தை நிர்ணயம் செய்து தொழிலாளர்களுக்கு வாங்கிக் கொள்ளும்படி வழங்கினார்கள். அதையொட்டி பல தொழிலாளர்கள் வாங்கிக்கொண்டு விட்டார்கள். சில தொழிலாளர்கள் இன்னும் அதைப் பெறாமல் இருக்கின்றார்கள். அவ்வாறு பெறாமல் இருக்கின்ற தொழிலாளர்களுடைய வாதம் அவர்களுக்கு ராஜ்ய சர்க்கார் கொடுக்கின்ற சம்பளத்தைவிட அதிகமாகக் கொடுக்க வேண்டுமென்று சொல்வதுதான். ஆனால் இதுவரையிலும் நாம் திருத்தி அமைத்திருக்கின்ற சம்பள விகிதம் காரணமாக இந்த போர்டாருக்கு வருஷம் ஒன்றுக்கு 30 லட்சம் ரூபாய் அதிகமாக செலவாகும். அதேபோல் பென்ஷன் முறையை அவர்களுக்கு விஸ்தரித்துக் கொடுத்ததனால் வருஷம் ஒன்றுக்கு போர்டாருக்கு 50,000 ரூபாய் அதிகமாகச் செலவாகும். ஆகவே, என்னைப் பொறுத்த அளவில் தொழிலாளர்கள் ராஜ்ய சர்க்கார் கொடுக்கின்ற சலுகைகள், அவர்களுக்கு கொடுக்கக்கூடிய ஊதிய நிலை ஆகியவற்றை எல்லாம் ஏற்றுக்கொண்டு, அதே முறையில் தங்களுடைய சம்பள விகிதங்களை நிர்ணயித்துக் கொள்வதனால் பல நன்மைகள் ஏற்படும் என்று நான் நினைக்கிறேன். தொழிலாளர் கள் தனியாக, தனியார் நடத்துகின்றதோடு ஒப்பிட்டுப் பார்த்தால் சில சலுகைகள் கிடைக்கும். சில சலுகைகள் கிடைக்காமல் போய் விடும். உதாரணமாக, கல்விச் சலுகை, வைத்திய சலுகை போன்ற வைகள் எல்லாம் இன்றைக்கு தனியார் துறையிலே நம்முடைய ராஜ்ய சர்க்கார் சிப்பந்திகளுக்கு கிடைக்கின்ற அளவுக்கு கிடையவே கிடையாது. போர்டில் இருந்தவர்கள் நீண்ட காலமாக சர்க்கார் ஊழியர்களாக இருந்த காரணத்தினால் அவர்களுக்கும் அதேவிதமான முறையே சரியாக இருக்குமென்று நான் நினைக் கிறேன். ஆகவே அந்த முறையை ஏற்றுக்கொண்டு, அவர்களுக்கு இப்போது நிர்ணயிக்கப்பட்டிருக்கின்ற ஊதியத்தைப் பெற்றுக் கொண்டு, நல்ல உறவு முறையை ஏற்படுத்துவார்கள் என்று நான் நம்புகிறேன்.

10-00 a.m.

இந்த இலாகாவினுடைய ஊழியர்களின் நல்ல பணியினால்தான் நாம் இன்று வளர்ச்சி அடைந்திருக்கிறோம் என்பதை யாரும் மறுக்க முடியாது. இந்த இலாகாவிலே பணியாற்றுகின்ற பிரதம என்ஜினியரிலிருந்து கடைநிலை ஊழியர் வரையிலும் செய்த நல்ல சேவையைப் பாராட்டி, இந்த அறிக்கையின் மீது விவாதம் தொடங்குமாறு நான் கேட்டுக் கொள்கிறேன்.

**Sri M. KALYANASUNDARAM : On a point of clarification, Sir.** நான் தவருகப் புரிந்துகொண்டு, என் கருத்தை வெளியிடக்கூடாது என்பதற்காக கேட்டுக் கொள்கிறேன். அக்கவுண்டெண்ட் ஜெனரல் காரியாலயத்திலிருந்து போர்டின் கணக்குகளை மேற் பார்வையிடுவது வசதியை உத்தேசித்து செய்யப் பட்டதாகச்

5th May 1962] [Sri M. Kalyanasundaram]

சொல்லப்படுகிறது. அது எந்தெந்த முறையிலே அனுகூலமாக இருக்கும்? அதனுல் கணக்குகள் சரியாக இருக்குமா? இது மின்சார போர்டுக்கும் பொருந்தும் என்றுல், பப்ளிக் ஒர்க்ஸ் இலாகாவுக்கு மட்டும் ஏன் பொருந்தாது? இது என்ன நோக்கத்தில் என்று சரியான விவரங்கள் கொடுத்தால், நான் பேச முடியும்.

THE HON. SRI R. VENKATARAMAN : பப்ளிக் ஒர்க்ஸ் இலாகா சர்க்கார் இலாகா. இந்த போர்டு தனியாக சட்டபூர்வமாக இயங்குகின்ற ஸ்தாபனம். அதனுல் பப்ளிக் ஒர்க்ஸ் இலாகாவையும், இதையும் ஒப்பிடுவது எந்தவிதத்திலும் சரியாகாது. ஆனுல், தனியாக நிர்வாகம் என்று அமைத்தபிறகு, அவர்களுடைய கணக்குகளை அவர்களே வைத்து, அந்தக் கணக்குகளைக் கண்காணிப்பதற்கு, அதற்கு நாம் மேல்பார்வை பார்த்துக் கொள்வதற்கு வழி செய்வதுதான் சரி. அதைவிட்டு, சர்க்கார் தான் கணக்கு வைத்துக்கொள்ள வேண்டுமென்று சொன்னுல், தனியாக போர்டு என்று ஒன்று இருக்கின்ற நிலைமை இருக்காது. சட்டத்தை கனம் அங்கத்தினர் அவர்கள் பார்த்தார்களானுல், அதிலே போர்டு எப்படி அமைக்க வேண்டுமென்று சொல்கின்றபோது, அக்கவுண்ட்ஸ் மெம்பர் என்று தனியாக ஒருவரை வைத்து அந்த அடிப்படையில்தான் இயங்குவது என்று செய்யப்பட்டிருக்கிறது. அதனுல் நன்மைகள்தான் ஏற்படும் என்று நான் நினைக்கிறேன்.

MR. SPEAKER : The hon. Member Sri M. Kalyanasundaram has given notice of some amendments.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, I would like to know how there can be an amendment when there will be no voting on the motion before the House.

SRI M. KALYANASUNDARAM : If that be the argument, I can easily reply. I would like the Hon. Minister to kindly refer to the speech of the Hon. Minister for Electricity while presenting the budget of the Electricity Board. In the beginning he has said like this—

"Sir, I rise to move that the Annual Financial Statement for 1962–63 and the Supplementary Financial Statement for 1961–62 of the Madras State Electricity Board laid on the table of this House be taken up for discussion."

THE HON. SRI M. BHAKTAVATSALAM : There can be no voting. It only says that the annual financial statement be taken up 'for discussion'. There is no voting on any motion. So there can be no amendment.

THE HON. SRI R. VENKATARAMAN : "ஐ மூவ்" என்பது முக்கியமல்ல. என்ன "மூவ்" செய்கிறேன் என்பதுதான் முக்கியம். "ஐ மூவ் பார் கன்சிடரேஷன்" என்றுல், அதைப்பற்றி இந்தச் சபையிலே நிர்ணயம் செய்யவேண்டும். "ஐ மூவ் பார் டிஸ்கஷன்" என்றுல், அதை விவாதத்திற்கு எடுத்துக்கொள்ள வேண்டும். மோஷன் என்பதற்கு நம்முடைய சபையின் 68-வது விதியைப்

பார்க்கும்படியாக கேட்டுக் கொள்கிறேன். அதில் மோஷன் என்ருல் என்ன என்று சொல்லியிருக்கிருர்கள். அதாவது சட்ட சபை அதன் மீது ஏதாவது முடிவு எடுக்க வேண்டுமென்ருல், அது தான் மோஷன். ஆகவே,

"A matter requiring the decision of the Assembly is brought forward by means of a motion proposed by a member and a question stated or read out by the Speaker thereon."

In terms of rule 68 of the Assembly Rules, there is no motion before the House.

**MR. SPEAKER:** According to section 61 of the Electricity Supply Act (Central Act) the State Government shall cause the Annual Financial Statement to be laid on the table of both the Houses of the State Legislature and such statement shall be open to discussion but shall not be subject to vote.

The Statement is, therefore, being discussed and there is no motion also before the house. When there is no motion, no amendment can be moved. It is not possible to allow the hon. Member Sri M. Kalyanasundaram to move any amendments.

We will now have the discussion on the Electricity Board Budget.

***SRI RAMA ARANGANNAL:** மாமன்றத் தலைவர் அவர்களே, நம்முடைய மாகாணத்தின் மின்சக்தித் துறையைப்பற்றி நம்முடைய அமைச்சர் அவர்கள் நல்ல முறையிலே இயங்கி வருவதாகவும், அதனுல் அதிகமான பலனை நம்முடைய கிராமங்கள் பெற்று வருவதாகவும் குறிப்பிட்டார்கள். உண்மையிலேயே, மின் சக்தித் துறை நம்முடைய மாகாணத்தில் ஆற்றி வருகின்ற சாதனை களுக்காக, மிகுந்த நல்லமுறையிலே பணியாற்றுகின்ற பிரதம என்ஜினியரையும், அவர்களுக்கு உதவியாளர்களாக அமைந்திருக் கின்ற பொறியியல் வல்லுநர்களையும், அவர்களுக்கு உறுதுணையாக விளங்குகின்ற தொழிலாளர்கள் அத்தனை பேரையும் நாம் பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறோம். தொழிலாளர்களைப் பற்றிக் குறிப்பிடுகின்ற நேரத்தில், நம்முடைய அமைச்சர் அவர்கள் தொழிலாளர்களுக்காகவும், மற்ற அதிகாரிகளுக்காகவும் அரசு செய்திருக்கின்ற நன்மைகளைப் பற்றி எடுத்துரைத்தார்கள். தொழிலாளர் இயக்கத்தில் வளர்ந்து, தொழிலாளர் மாட்டு நல்ல அன்பையும், இரக்கத்தையும் பெற்றிருக்கின்ற நம்முடைய அமைச்சர் அவர்களுக்கு நான் ஒன்று தெரிவித்துக்கொள்ள ஆசைப்படுகிறேன். மின்சாரத் துறையில் 45,800 தொழிலாளர்கள் பணியாற்றிக் கொண்டிருக்கிருர்கள். அவர்களிலே 27,300 பேர் களுக்குத்தான் மாதச் சம்பளம் தரப்படுகின்றதே ஒழிய, 18,500 பேர்கள் தினக் கூலிகளாகத்தான் இருக்கிருர்கள். இப்படி தினக் கூலிகளாக இருக்கின்ற முறையினை மாற்றி, அவர்களையும் நிரந்தர ஊழியர்களாக்குவதற்கு வழிவகை செய்யவேண்டுமென்று அவர்கள் மாட்டு அன்புள்ளம் கொண்டுள்ள அமைச்சர் அவர்களை நான் கேட்டுக்கொள்கிறேன்.

5th May 1962] [Sri Rama Arangannal]

அது மட்டுமன்று. தேர்தலுக்கு முன்பு இந்தத் தொழிலாளர்கள் அத்தனைபேரும் வேலை நிறுத்தம் செய்யப்போவதாக சர்க்காருக்கு நோட்டீஸ் கொடுத்திருந்தார்கள். சர்க்கார் சார்பிலே, தேர்தல் நேரமாக இருக்கின்ற காரணத்தினாலே, இப்போது வேலை நிறுத்தம் செய்யவேண்டாம் என்று கேட்டுக் கொள்ளப்பட்டது. அதையொட்டி ஒரு நாள் அடையாள வேலை நிறுத்தம் செய்ததன் மூலம், தொழிலாளர்கள் தங்களுடைய 10 அம்ச கோரிக்கைகளை வலியுறுத்தி இருக்கின்றார்கள். அவைகளையெல்லாம் அமுல் செய்ய வேண்டுமென்று தொழிலாளர்கள் சார்பில் அமைச்சர் அவர்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

இன்றையத்தினம் சமர்ப்பிக்கப்பட்டிருக்கின்ற இந்த நிதி நிலை அறிக்கையில் போர்டுக்குப் புதிதாக ஒரு வேலை கொடுக்கப் பட்டிருக்கின்றது என்பதை வலியுறுத்தி கனம் அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். இருக்கின்ற வேலையோடு கணக்கு வேலையையும் போர்டார் செய்யப்போகிறார்கள் என்று அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். இங்கிலாந்தில் இருக்கிற மின்சாரக் கவுன்சில் தொழிலாளர் சபை ஆராய்ச்சியாளராக விளங்கும் ஆர். டி. வி. ராபர்ட்ஸ் என்பார் குறிப்பிட்ட ஒரு விஷயத்தை நான் அமைச்சர் அவர்களின் கவனத்திற்குக் கொண்டு வர ஆசைப்படுகிறேன். பிரிட்டனிலே இருக்கிற மின்சாரக் கவுன்சில் மின்சாரம் உற்பத்தி செய்வதையும், மின்சாரம் எப்படி அளிப்பது என்கின்ற வேலையையும் மட்டும் கவனித்துக்கொண்டு வருகிறது. அதே சமயத்தில் பிரிட்டனில் பல இடங்களில் 'லோகல் ஏரியா போர்டு' கள் இருக்கின்றன. அவைதான், அங்கே மின்சாரத்திற்குரிய கட்டணங்களை வசூலிப்பதும் மின்சாரத்தை எப்படி அளந்து கொடுக்கலாம் என்ற காரியங்களைக் கவனித்துக்கொண்டு வருவதும். மின்சார உற்பத்தியை எப்படி அதிகரிக்கலாம் என்பதை ஆராய்ந்து செய்வதற்கு ஒரு போர்டு. அதை எப்படி நிர்வகிப்பது என்பதற்கு பல லோகல் ஏரியா போர்டுகள் என்கிற திட்டம் பிரிட்டனில் இருப்பதாகவும், ஆகவேதான் அங்கே அது செம்மையாக நடைபெறுகிறது என்றும் திரு. ராபர்ட்ஸ் அவர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள். அந்த வகையிலே நம்முடைய மாநிலத்தைப் பொறுத்த அளவிலே இப்பொழுது இருக்கிற போர்டு, இரண்டு வகையாக செய்யப்பட்டு, ஒன்று மின்சார சக்தி உற்பத்திக்காக உள்ள நல்ல ஆக்க வழிகளை மட்டும் கவனிக்கவேண்டும் என்று தெரிவித்துக் கொள்ள ஆசைப்படுகிறேன். இப்படி நான் சொல்வதற்குக் காரணம், நமது அமைச்சர் அவர்கள் பேசியபோது நமக்குப் பல நீர்வளங்கள் இருந்தாலும், அந்த வளங்களிலிருந்து பெறுகிற அத்தனை சக்தியும் நமக்குப் போதாது என்று குறிப்பிட்டார்கள். நீர்வீழ்ச்சி மின்சாரம் மட்டும் போதாது, தெர்மல் நிலையங்கள் வேண்டும். அணுசக்தி மின்சார நிலையம்கூட நமக்குக் கிடைக்கும், அதற்கான வழிவகைகளை நாங்கள் செய்கிறோம் என்று சொன்னார்கள். நிச்சயமாக விரைவிலே அந்தக் காரியங்களைச் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

[Sri Rama Arangannal] [5th May 1962

அதே சமயத்தில் தெர்மல் ஸ்டேஷன் அமைப்பது என்று சொன்னால், நமக்கு நிலக்கரி தேவைப்படுகிறது. நிலக்கரி நமக்கு வெளி மாகாணங்களிலிருந்து வரவேண்டிய அவசியம் இருப்பதினால், விலை ஏற்றம் அதிகமாக இருக்கிறது. ஆகவே, தெர்மல் ஸ்டேஷன் மூலம் நமக்கு லாபம் கிடைப்பதற்கான வழிவகைகள் இல்லை என்று வல்லுநர்கள் தெரிவிக்கிறார்கள். அதைப் பார்க்கிற நேரத்தில், ஹொகெனக்கல் திட்டம் நமக்கு இன்றையதினம் ஒரு பெரிய வரப்பிரசாதமாக அமைந்திருக்கிறது. அதைப்பற்றி சொல்லுகிற நேரத்தில் குந்தா திட்டத்தைவிட இரண்டு மடங்கு சக்தி பெறமுடியும் என்றும், அதனால் பலவிதமான நன்மைகளைப் பெறமுடியும் என்று ஆராய்ச்சி வல்லுநர்கள் தெரிவிக்கிறார்கள். ஆகவே, ஹொகெனக்கல்லில் காவேரியில் அணைபோட்டு அதன் மூலம் மின்சாரம் பெறுகின்ற திட்டத்தை நல்ல முறையிலே கூடிய விரைவிலே அமுல் நடத்தவேண்டுமென்று நான் அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். அதற்கு 58 கோடி ரூபாய் செலவாகும் என்று சொன்னார்கள். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஆகுமா, சாத்தியமாகுமா என்றும் நாங்கள் முயற்சித்துக்கொண்டிருக்கிறோம் என்றும் தெரிவித்தார்கள்! இந்தக் கேள்விக் குறிகளை நீக்கிவிட்டு நிச்சயம் சாத்தியமாகின்ற வகையிலே ஹொகெனக்கல் திட்டத்தை அமுல் நடத்தவேண்டுமென்று நம்முடைய அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். 58 கோடி ரூபாய் நாம் செலவழித்தால், ஆண்டு ஒன்றுக்கு 11 கோடி ரூபாய் வருமானம் கிடைக்கும் என்று நம்முடைய கணக்காளர்கள் தெரிவித்திருக்கிறார்கள். ஆகவே ஆறு வருட காலம் நாம் பொறுத்திருந்தால், நாம் போடுகின்ற முதலையே எடுத்துவிடலாம். ஆகவே, இந்தத் திட்டத்தை எப்படியாவது அமுல் நடத்தவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

அதுமட்டுமன்றி, இன்னும் சில சில்லரை திட்டங்களையும் நம்முடைய போர்டு பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளலாம். அந்த வகையிலே நான் டெல்லியில் இருக்கிற 'இண்டியன் அக்ரிகல்சரல் ரிஸர்ச் இன்ஸ்டிட்யூட்'-ல் செய்து பார்த்த ஒரு சாதனையைக் குறிப்பிட விரும்புகிறேன். மாட்டுச் சாணத்திலிருந்து உருவாகிற 'காஸை'-க் கொண்டு மின்சக்தி தயாரிக்க முடியும் என்றும், அந்த சக்தியைக்கொண்டு கிராமங்களில் இருக்கிற தண்ணீரை எடுப்பதற்கும், கிராமப்புறங்களில் விளக்கு வசதி செய்து கொடுப்பதற்கும் முடியும் என்றும் டெல்லியில் இருக்கிற மேற்படி கழகத்தார் முடிவு செய்திருக்கிறார்கள். நம்முடைய கிராமங்களில் அப்படிப்பட்ட பரிசீலனையைச் செய்து பார்ப்பதற்கு போர்டார் முன் வரலாம். போர்டுக்கு இப்படி நிறைய வேலைகள் இருக்கிற காரணத்தினால், அதனிடமே அரசாங்கக் கணக்குகளையும் கொடுத்துப் பார்க்கச் சொன்னால், நிர்வாகமும், ஆராய்ச்சியும் இரண்டும் சேர்ந்து குழப்பமான ஒரு நிலைமை ஏற்பட ஏதுவாகும். ஆகவே, இதையெல்லாம் கவனிக்க வேண்டுமென்று அமைச்சர் அவையைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

5th May 1962] [Sri Rama Arangannal]

அதே நேரத்தில் விவசாயிகளுக்கு மின்சக்தியைக் கொடுக்கிற வகையிலே சில குறைபாடுகள் இருப்பதை நம்முடைய அமைச்சர் அவர்களின் கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன். உதாரணமாக, ஜவ்வாது மலையிலும், அதைச் சார்ந்திருக்கிற ஆலங்காயம் யூனிட்டைச் சார்ந்த முல்லைக்கொம்பை போன்ற கிராமங்களிலும், இரவு நேரங்களில் மின்சாரம் சப்ளை செய்யப்படுவதினால், தேள், பாம்பு போன்ற விஷ ஜந்துக்களின் கடிக்கு விவசாயிகள் ஆளாக்கப்படுகிறார்கள், அதாவது வெற்றிலை, கரும்பு பயிர்களில் இரவு நேரங்களில் நீர் பாய்ச்சும்பொழுது! ஆகவே, மாவு மில் போன்றவைகளுக்கு இரவு நேரங்களில் மின்சாரம் கொடுத்துவிட்டு பகல் நேரம் பூராவும் விவசாயிகளுக்கு மின்சாரம் கொடுக்க அரசாங்கம் முன்வர வேண்டும் என்று நான் கேட்டுக் கொள்ளுகிறேன்.

அதுமட்டுமன்றி, விவசாயிகளுக்கு பிரதிமாதமும் வருவாய் வருவதில்லை. இதனால் பிரதி மாதமும் ஏழை விவசாயிகள் மின்சாரக் கட்டணம் செலுத்துவதற்கு கஷ்டப்படுகிறார்கள். ஆகவே, அதைவிட மகசூல் காலத்தில் ஆறு மாதங்களுக்கு ஒரு தடவை கணக்கு வைத்து வசூலிப்பதற்கு ஏற்பாடு செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். நகர்ப்புறங்களில் வாழும் மக்களைப் பொறுத்த அளவில், அவர்களும் மின்சாரக் கட்டணம் செலுத்துவதிலே மிகவும் சிரமத்திற்கு ஆளாக்கப்படுகிறார்கள். என்னுடைய தொகுதியிலிருந்தே 2, 3 புகார்கள் வந்திருக்கின்றன. நகரத்தில் இருக்கிற மின்சாரக் கட்டணத்தை வசூலிப்பவர்கள் அவர்களுடைய விருப்பம்போல காரியங்களைச் செய்துகொண்டு போகிறார்கள். வீட்டிலே கணவன்மார் இல்லாத நேரத்தில், வீட்டிற்குள் போய் கனெக்ஷனை துண்டித்து விட்டுப் போய்விடுகிறார்கள். எங்கே பணத்தைக் கொண்டுபோய் கட்ட வேண்டும் என்ற விவரம் தெரியாமல் பலர் திண்டாடும் நிலைமையில் இருக்கிறார்கள். ஆகவே, ஏராளமான பில் கலெக்டர்களைப் போட்டு, வீடுவீடாகப் போய் வசூலிக்கும் முறையை நாம் மேற்கொள்ளவேண்டும் என்று தெரிவித்துக் கொண்டு, என்னுடைய உரையை முடித்துக்கொள்ளுகிறேன்.

* **Sri C. M. AMBIKAPATHI :** மதிப்பிற்குரிய சபாநாயகர் அவர்களே, இப்பொழுது தமிழ்நாடு மின்சார போர்டு வரவு செலவு திட்டத்தை அமைச்சர் அவர்கள் நமது சபையிலே சமர்ப்பித்திருக்கிறார். அதன் அடிப்படையில் சில வார்த்தைகள் சொல்ல நான் ஆசைப்படுகிறேன். தமிழ் நாட்டில் மின்சாரமானது மிகவும் முன்னேற்றத்தில் வந்திருக்கிறது என்பது நம் எல்லோருக்கும் தெரிந்த விஷயம். ஆண்டுதோறும் ஏறத்தாழ 1,500 கிராமங்களுக்கு மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் மின்சாரம் அளிக்கப்படும் என்று முன்பு குறிப்பிட்டார்கள் அமைச்சர் அவர்கள். அந்த அடிப்படையில் பார்க்கும்பொழுது என்னுடைய தஞ்சை மாவட்டத்தில், தமிழ் நாட்டில் மின்சார நிலையங்கள் அதிகரித்தும், மின்சார உற்பத்தி அதிகரித்தும், அந்தப் பகுதியிலே கிராமப் பக்

கங்களில் இன்னும் சில இடங்களில் மின்சாரம் கொடுக்கப்படாமல் இருந்து வருகிறது. அந்தப் பகுதியிலே உள்ள பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் மூலம் தீர்மானத்தைப் போட்டு குறிப்பிட்ட கிராமங்களுக்கு மின்சாரம் வேண்டும் என்று அனுப்புகிறோம். அதே நேரத்தில் மாவட்டக் கவுன்சில் மூலமும் தீர்மானங்கள் போட்டு அனுப்பப்படுகின்றன. இப்படி அனுப்பப் பட்டும்கூட, எங்கள் தஞ்சை ஜில்லாவில் இருக்கும் தனியார் துறை கம்பெனிகள் மூலமாக அவர்கள் அந்த வேலையை மேற்கொண்டு நடத்த முடியாது என்ற நிலைமை சில சமயங்களில் ஏற்பட்டுவிடு கிறது. அதே நேரத்தில் அவர்களை நாங்கள் கேட்டால், 'அரசாங் கம் எங்களுக்கு கடனுகப் பணம் கொடுத்தால் நாங்கள் செய்து தருகிறோம்' என்று சில சமயங்களிலே சொல்லப்படுகிறது. அது மட்டுமின்றி, "4 ஆண்டுகளுக்கு அந்த மின்சாரத் துறையை 'நாஷனலைஸ்' செய்யவில்லை என்று நீங்கள் எழுதிக்கொடுத்து விட்டால் நாங்கள் செய்து தருகிறோம்" என்று அவர்கள் எங்கள் பேரில் ஒரு நிபந்தனையையும் போட்டுவிடுகிறார்கள். அந்த வித மான நிபந்தனையை அந்தப் பகுதி கிராம மக்களிடம் சொல்லுகிற நேரத்தில், அவர்கள் மிகவும் அதிர்ச்சி அடையவேண்டிய நிலையில் இருக்கிறார்கள். அந்த விதத்தில் நம் அரசாங்கமானது தனியார் துறையில் இருக்கும் கம்பெனிகளை எடுத்துக் கொள்ளலாம் என்று ஒரு திட்டம் இருக்கிற காரணத்தினால், தஞ்சை ஜில்லாப் பகுதியில் உள்ள கம்பெனிகளையும், அரசாங்கம் தன்னுடைய திட்டத்தில் ஏற்றுக்கொண்டு, அதை 'நாஷனலைஸ்' செய்தால் மிகவும் நன்றாக இருக்கும் என்று கருதுகிறேன். அதே நேரத்தில் நாகப்பட்டிணம் தாலூகா, திருத்துறைப்பூண்டி தாலூகா, மன்னார்குடி தாலூகா ஆகிய மூன்று பகுதிகளில் அதிகப்படியான தரிசு நிலங்களுக்கு தண்ணீர் சாகுபடிக்கு போகமுடியாத நிலையில் இருக்கிறது. அந்த விதமான பகுதிகளில் 'பவர் இர்ரிகேஷன்' கொண்டு வந்தால் மிகவும் நன்றாக இருக்கும் என்று கருதுகிறேன். அவர்கள் கொடுக்க வேண்டிய வாடகைத் தொகையை நில வருவாயிலிருந்து 'டாக்ஸ்' மூலம் எடுத்துக்கொண்டால், அந்தப் பகுதி விவசாயி களுக்கு பெரிய உதவி செய்ததாகக் கருதப்படும். இந்த நிலையிலே அரசாங்கம் இந்த ஏற்பாட்டைச் செய்ய முன்வந்தால், திருத் துறைப்பூண்டி தாலூகாவில் ஏறத்தாழ 3,000 ஏக்கர் நிலங்கள் நல்ல பாசன வசதி பெற்று, நல்ல உற்பத்தி உண்டாக்கக்கூடிய சூழ்நிலை ஏற்படும். அதே நேரத்தில் அந்தப் பகுதியில் உள்ள ஏழை விவ சாயிகளுக்கு நல்ல ஒரு உதவி செய்ததாகக் கருதப்படும். ஆகவே 'பவர் இர்ரிகேஷன்' மிகவும் அவசியம் என்று கருதப்படுகிறது. தஞ்சை ஜில்லா நெற்களஞ்சியம் என்று சொல்லப்பட்டாலும், இந்த விதத்தில் வசதி செய்துகொடுக்கப்படாததால், வருஷத் திற்கு 6 மாதங்கள் சாகுபடி செய்துவிட்டு, மற்ற 6 மாதங்களில் அவர்கள் ஓய்விலே எந்த வேலையும் இல்லாமல் இருக்கிறார்கள். அவர்களுக்கு இவ்விதமான உதவியைச் செய்யும் நேரத்தில், மற்றும் உதவியாக இருக்கிற பல தொழில்களையும் நடத்தவேண் டும். அப்படிச் செய்தால் உணவு உற்பத்தியை விவசாயிகள் மேற்கொண்டு பெருக்குவதற்கு வேண்டிய நல்ல நிலைமை ஏற்படும்

5th May 1962] [Sri C. M. Ambikapathi]

என்று மந்திரி சபைக்கு தெரிவித்துக்கொள்ளுகிறேன். இப்படி தீர்மானங்கள் போட்டு அனுப்பியும்கூட, மந்திரி அவர்களிடம் சில மகஜர்கள் வந்து, அவர்கள் சில கிராமங்களைக் குறிப்பிட்டு, அந்த கிராமங்களுக்கு மின்சாரம் கொடுக்கவேண்டுமென்று கட்டளை யிடுகிறார்கள். இப்படிக் கட்டளையிடுவதால், பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் தீர்மானமும், டிஸ்டிரிக்ட் கவுன்சில் தீர்மானமும் புறக் கணிக்கப்படுகிறது. எந்தக் கிராமத்திற்கு மின்சாரம் அவசியம் என்று நாங்கள் கருதுகிறோமோ, அந்தக் கிராமத்திற்கு மின்சாரம் வழங்குவது தடைப்படுகிறது. கடன் உதவி கொடுக்கவேண்டு மென்று கருதினால், அந்தக் கடனை பஞ்சாயத்து யூனியன் கவுன் சில்களுக்குக் கொடுத்துவிட்டால் அவர்கள் வேண்டியதைச் செய்து கொடுப்பார்கள் என்று கூறிக்கொண்டு, இந்த சந்தர்ப்பத் தில் எனக்குப் பேச அனுமதி அளித்ததற்கு எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

* **SRI G. D. PERUMAL RAJU**: கனம் சபாநாயகர் அவர் களே, இந்த மின்சார போர்டு வரவு செலவுத் திட்டத்தைப் பற்றிப் பேச எனக்கு அனுமதி அளித்ததற்கு எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். கோவை மாவட்டத்திலே அந்தியூர், தாளவாடி, கூகலூர் ஆகிய பிர்க்காக்களில் மின்சார வசதி மிகவும் பிற்போக்கான நிலையில் இருக்கிறது. அந்தியூரில் நமது சர்க்கா ரால் கடன்கள் கொடுக்கப்பட்டு சுமார் 100 கிணறுகள் வெட்டப் பட்டிருக்கின்றன. அவைகளுக்கு மின்சார வசதி அளிக்க வேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன். அந்தியூரிலிருந்து பர்கூர் போகும் ரோடு மலைப் பிரதேசமாக இருக்கிறது. மேலும், அந்தியூரில் வாரச் சந்தை இருப்பதால் போக்குவரத்து அதிகமாக இருக்கிறது. அங்கே மிருகங்களினால் மக்கள் பாதிக்கப்படுகிறார்கள். சுமார் 6 மாதங்களுக்கு முன்பு இரண்டொருவர் யானையினால் கொல்லப்பட் டார்கள். அந்த ரோடில் மின்சார விளக்குப் போடுவது நல மாக இருக்குமென்பதை நான் தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்கிறேன். தாளவாடி பிர்க்காவும் அபிவிருத்தி அடையாத பிர்க்கா. அங்குள்ள விவசாயிகளுக்கு மின்சாரம் அதிகமாகத் தேவைப்படுகிறது. மின்சார வசதியை விஸ்தரிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். கூகலூர் பிர்க்காவைப் பொறுத்தவரையில் சென்ற பல வருஷங்களாக விண்ணப்பித்த போதிலும், மின்சார வசதி இன்னும் கொடுக்கப்படாமல் இருக்கிறது. 1½ வருஷத்திற்கு முன்னால் நான் ஒரு மனுக் கொடுத்தும்கூட இன்னும் அது கவனிக் கப்படாமல் இருக்கிறது என்பதை நான் வருத்தத்துடன் தெரிவித் துக்கொள்கிறேன். கூகலூர் பிர்க்காவில் வெள்ளாளப்பாளையம் போன்ற கிராமங்களில் இன்னும் வீடுகளுக்குக் கனெக்ஷன் கொடு படாமல் இருக்கிறது என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். இந்த மூன்று பிர்க்காக்களில் ஹரிஜனங்களுக்காக சர்க்காரால் இலவசமாக மின்சார உதவி அளிக்கப்பட்ட போதிலும்கூட, இன் னும் சரியாக அது அமல் நடத்தப்படவில்லை என்பதைத் தெரிவித் துக்கொண்டு எனக்குப் பேச வாய்ப்பு அளித்த கனம் சபாநாய கர் அவர்களுக்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

[5th May 1962

***Sri S. MURUGAIYAN** : கனம் சபாநாயகர் அவர்களே, மின்சார போர்டு நிதி நிலை அறிக்கை மீது என்னுடைய கருத்துக் கள் சிலவற்றைச் சொல்ல விரும்புகிறேன்.

மற்ற மாநிலங்களைவிட நமது மாநில மின்சார இலாகா நல்ல முறையில் வேலை செய்கிறது. மின்சார வசதி ஏராளமாகச் செய் யப்பட்டிருக்கிறது என்று சொல்லப்படுகிறது. பொதுவாக, மற்ற மாநிலங்களிலே தொழில் வளத்திற்காக மின்சாரத்தைப் பயன் படுத்துகிறார்கள். நமது மாநிலத்திலே விவசாயக் காரியங்களுக் காக அதிகமாக மின்சாரத்தைப் பயன்படுத்துகிறோம். அதிலே விவ சாயிகளுக்கு ஏராளமான குறைகள் இருந்து வருகின்றன. குறிப் பாக ஒரு ஹார்ஸ் பவருக்கு 45 ரூபாய் விதம் மினிமம் சார்ஜ் என்று வாங்குகிறோம். அதிலும் குறிப்பிட்ட காலத்திற்கு விவசாயி களிடத்தில் ஒப்பந்தம் செய்து கொள்கிறோம். அப்படிச் செய்து கொண்டபோதிலும், ஒரு நாளைக்கு 14 மணி நேரம் தான் அவர் களுக்கு கரன்ட் சப்ளை செய்யப்படுகிறது. ஒரு நாளைக்கு 14 மணி நேரம் மட்டும் கரண்ட் சப்ளை செய்தால், எந்த முறையில் விவசா யம் செய்ய முடியுமென்பதை இந்த நேரத்தில் நான் ஞாபகப் படுத்த விரும்புகிறேன். இந்தக் குறைகள் எல்லாம் நிவர்த்தி செய்யப்பட வேண்டும். இரவிலே 10 மணிக்கு ஆரம்பித்து மறுநாள் பகல் 12 மணி வரையில் கரண்ட் சப்ளை செய்கிறார்கள். ஒன்று, அந்த முறையே நிரந்தரமாக இருந்து வரவேண்டும். ஒவ்வொரு வாரத்திலேயும் வெவ்வேறு நேரங்களில் கரன்ட் சப்ளை செய் கிறார்கள். அதாவது, இரவு 10 மணிக்கு ஆரம்பித்து காலை 6 மணி வரையிலும், பிறகு மதியத்தில் 12 மணி முதல் மாலை 6 மணி வரை யிலும் சப்ளை செய்கிறார்கள். இதுபோன்று மாற்றி மாற்றி வெவ் வேறு நேரங்களில் கரண்ட் சப்ளை செய்வதால், விவசாயிகள் மிக வும் பாதிக்கப்படுகிறார்கள் என்பதைத் தெரிவித்துக் கொள் கிறேன். 1960-ம் வருடம் ஏப்ரல் மாதம் முதல் ஒரு ஹார்ஸ் பவருக்கு 45 ரூபாய் விதமும், பிற்பட்ட பகுதிகளுக்கு ரூபாய் 35 விதமும் நிர்ணயித்திருக்கிறார்கள். ஆனால் இந்த முறை கையாளப் படுவதாகத் தெரியவில்லை. பொதுவாக, விவசாயிகளிடத்தில் தொடக்கத்தில் எந்த விகிதத்திற்கு ஒப்பந்தம் செய்தார்களோ, அதைத் தான் கேட்டுக்கொண்டு வருகிறார்கள்.

அடுத்தபடியாக, கிணற்றிலே தண்ணீர் இல்லாத காலத்திலே கிணறு வெட்ட வேண்டியிருக்கிறது. நாள் பூராவும் கரண்ட் வேண்டுமென்று விவசாயிகள் மனுச் செய்துகொள்கிறார்கள். அந்த மனுவை அனுப்பிவிட்டு மின்சார ஆபீசுக்கு அவர்கள் பல முறை நடக்க வேண்டியிருக்கிறது. மின்சாரம் வரும்பொழுது, பயிர்கள் காய்ந்து போய் அவர்களுக்கு நஷ்டம் ஏற்படுகிறது. மனுவை எழுதிக்கொண்டு, சூப்பர்வைசரைப் போய்ப் பார்த்தால், "ஆகட்டும்" என்று அவர் சொல்லுகிறார். அவர் வந்து பார்த்து, அந்த மனுவில் குறிப்பிட்ட கிணறு வெட்ட வேண்டியது உண்மையா, அதற்கு மின்சாரம் கொடுக்க வேண்டியது அவசியமா என்று பரிசீலனை செய்வதற்கு 10 நாட்கள் ஆகிவிடுகின்றன. இந்த முறையை மாற்றி, விவசாயிகள் கிணறு வெட்ட காண்டிற்கு மனுப்

போட்டால் அந்தத் தினமோ அல்லது மறு தினமோ மின்சார வசதி கிடைக்க ஏற்பாடு செய்யவேண்டும். பத்து நாட்களுக்குப் பிறகு கரண்ட் சப்ளை செய்தால், அந்த நேரத்திலே கிணறு வெட்டக் கூடிய ஆட்கள் கிடைக்க மாட்டார்கள். கரண்ட் கிடைக்கும் பொழுது ஆட்கள் கிடைக்கவில்லை, ஆட்கள் கிடைக்கும்பொழுது கரண்ட் கிடைக்கவில்லை என்ற அளவிலே விவசாயிகள் துன்பத்திற்கு ஆளாகி வருகிறார்கள். ஆகவே, மனுப் போட்ட உடனேயே, உடனடியாக கரண்ட் சப்ளை செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

கிணறுகளில் தண்ணீர் இல்லாத காலங்களிலே எலெக்டிரிக் போர் போட வேண்டிய நிலைமை ஏற்படுகிறது. அப்பொழுது மின்சார அலுவலகத்தைக் கலந்து கேட்கிற பொழுது, அதற்குத் தனியாக கனெக்ஷன் வாங்க வேண்டுமென்று சொல்கிறார்கள். தனியாக கனெக்ஷன் வாங்க வேண்டுமென்றால் ரூ. 300 அல்லது ரூ. 400 வரை செலவு செய்யவேண்டியிருக்கிறது. வசதியுள்ளவர்கள் பயன்படுத்திக் கொள்ளுகிறார்கள். வசதியில்லாதவர்கள் பயன்படுத்திக்கொள்ள முடியவில்லை. அவர்களுக்கு ஏற்கனவே கொடுத்திருக்கக்கூடிய லயனிலிருந்து கரண்டை எடுத்துக் கிணறுகளில் போர் போடுவதற்கு உபயோகப்படும் வகையில் சட்டத்தைத் திருத்தியமைக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, கவர்னர் அவர்கள் உரையில் சுமார் 1,37,000 பம்பு செட்டுகள் இயங்கி வருகின்றன என்று குறிப்பிடப்பட்டிருந்தது. இப்பொழுது மந்திரி உரையில் 1,39,200 பம்பு செட்டுகள் இயங்குகின்றன என்று சொல்லப்பட்டுள்ளது. இதில் எது சரியான கணக்கு என்று தெரியவில்லை.

**THE HON. SRI R. VENKATARAMAN** : அதற்குப் பிறகு ஒரு மாதத்திலே அதிகமான பம்பு செட்டுகள் வழங்கப்பட்டிருக்கின்றன.

**SRI S. MURUGAIYAN** : கனம் அமைச்சர் அவர்கள் கொடுத்த தகவலுக்கு மிகவும் நன்றி. இங்கே விவசாயிகளுக்கு மேலும் பல சலுகைகள் அளிக்கப்பட்டிருக்கின்றன என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. அது எந்த வகையில் என்று தெரியவில்லை. பொதுவாக லைசென்ஸ் பெற்ற கம்பெனிகள் இருக்கின்றன. அந்தப் பகுதிகளில் மக்களுக்கு மின்சார சப்ளை கிடைக்கவில்லை என்ற குறை இருக்கிறது. இப்படி இருக்கும் மின்சாரக் கம்பெனிகளை ஏன் சர்க்காரின் உடமையாக்கிக்கொள்ளக் கூடாது என்று கேட்க விரும்புகிறேன். மின்சாரக் கட்டிடங்களுக்காக ஒரு வருஷத்திற்கு 1,18,000 ரூபாய் வாடகையாகக் கொடுக்கிறோம். அந்தக் குறையை நீக்கி, அது போன்ற கட்டிடங்களை மின்சார போர்டே ஏன் கட்டிக் கொள்ளக் கூடாது என்று கேட்க விரும்புகிறேன். பொதுவாக கிராமவாசிகள் மின்சாரம் வேண்டுமென்றால், மின்சாரத் துறை அலுவலங்களுக்கு 3, 4 வருஷங்களுக்கு மேலாக நடக்க வேண்டியிருக்கிறது. அந்த விதமாகச் செல்கிறவர்களுக்கு எந்த அதிகாரி

10-3 a.m

[Sri S. Murugaiyan] [5th May 1962

களைப் பார்க்க வேண்டும், என்ன செய்ய வேண்டுமென்று தெரிவதில்லை. அவர்களுக்கு வேண்டிய உதவிகளை உடனுக்குடனே செய்து தர வழிவகை காண வேண்டும். சீப் எஞ்சினியர், எஸ். இ. ஆபீசுகளில் உடனுக்குடன் அவர்களுக்கு உதவி கிடைக்கின்றன. ஆனால், கீழே உள்ள அலுவலகங்களில் நல்ல முறையிலே தகவல்கள் கிடைப்பதில்லை. ஒரு பம்பு செட்டு போட வேண்டுமென்றால், விவசாயி இரண்டு வருஷ காலம் நடக்க வேண்டியிருக்கிறது. அந்த முறையை மாற்றி, ஒருவர் மனு செய்தால், அவருக்குக் கொடுக்க வேண்டிய ஏற்பாடுகளை உடனடியாகச் செய்யக் கூடிய முறையில் அமைக்க வேண்டும்.

சில ஊர்களில் எல்லா வேலைகளையும் செய்துவிட்டு, கம்பம் ஏற்றிக்கொண்டு வரவேண்டும் என்கிறார்கள். சூபர்வைசரைக் கேட்டால், அவர் "நான் என்ன செய்யட்டும்; ஆட்கள் கிடைக்கவில்லை, போதுமான ட்ராக்டர் இல்லை" என்கிறார். அதே நேரத்தில் பெருவாரியான தொழிலாளர்களையும் வேலையை விட்டு எடுத்துவிட்டிருக்கிறார்கள். ஆட்களை எடுத்துவிட்டு, ஆள் கிடைக்கவில்லை என்றால் அது எப்படிப் பொருத்தமோ தெரியவில்லை. இதையெல்லாம் நல்ல முறையில் மாற்றி அமைக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டு, இந்தச் சந்தர்ப்பம் கொடுத்தமைக்கு என் வணக்கத்தைத் தெரிவித்துக்கொண்டு முடிக்கிறேன். வணக்கம்.

**SRI J. MATHA GOWDER**: கனம் சபாநாயகர் அவர்களே, இந்தச் சபையிலே மின்சார இலாகா அமைச்சர் சமர்ப்பித்திருக்கும் 1962-63-ம் ஆண்டுக்கான நிதி நிலை அறிக்கையை வரவேற்று ஒரு சில கருத்துக்களைச் சொல்ல விரும்புகிறேன். மின்சார இலாகா நிதி சம்பந்தமாக வோட்டு அளிக்கும் அதிகாரம் இந்தச் சபைக்கு இல்லாமல் இருந்தாலும், இந்தச் சபையிலே என்னென்ன கருத்துக்களைச் சொல்கிறோமோ, அந்தக் கருத்துக்களை மின்சார போர்டு மீட்டிங்குகள் நடைபெறும்போது, கவனித்து அங்கத்தினர்கள் சொல்லும் குறைகளை நிவர்த்திக்க, அவைகளைப் பரிசிலனை செய்ய ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும் என்ற எண்ணத்தில் கருத்துக்கள் சொல்லப்படுகின்றன. வோட்டு அளிக்கும் அதிகாரம் இல்லை என்ற காரணத்தினால், இந்தச் சபையில் சொல்லப்படும் கருத்துக்களை ஏனோ தானோ என்று புறக்கணிக்கக் கூடாது என்று குறிப்பிட விரும்புகிறேன்.

மின்சாரத்தைப் பொறுத்த வரையில், தமிழகத்தை எடுத்துக் கொண்டால், நம் நாட்டிலேயே, வேறு எந்தப் பிராந்தியத்திலும் இல்லாத அளவுக்குக் காரியங்களைச் செய்திருக்கிறோம். அந்தத் துறையினருக்கு மேலும் மேலும் ஊக்கம் கொடுத்தால்தான் அவர்கள் நல்ல முறையிலே உற்சாகத்துடன் வேலை செய்ய ஏதுவாக இருக்கும். அதை விட்டு, அரசியல் ரீதியில் ஏதோ காரணத்தை வைத்துக் கொண்டு, அந்த இலாகா ஒன்றுமே செய்யவில்லை என்று குறை கூறினால், அதுவும் ஸ்தம்பித்துவிடும். அவர்கள் "எங்களுடைய இலாகா மக்களுக்கு எவ்வளவு நல்லது செய்தாலும், எங்கள் பேரிலும் குறைகள்தான் சொல்லுகிறார்கள்" என்று உற்சாகம்

(Mr. Deputy Speaker in the Chair.)

குன்றி, ஸ்தம்பித்து விடுவார்கள். இன்றைக்கு மின்சாரத் துறை முன்னணியில் இருப்பதை நாம் பாராட்டினால் தான் அவர்களும் இன்னும் நன்றாக வேலை செய்ய முடியும். நாம் பல திட்டங்களை எடுத்து அமுலாக்கி இருக்கிறோம். அவை போதாது என்று சொல்லி இன்றைக்கு அமைச்சர் ஹொகனேக்கல் திட்டத்தை, மைசூர் அரசாங்கத்தோடு ஏற்பாடு செய்து அதை நிறைவேற்றினால், நமது மின்சாரத் தேவையெல்லாம் பூர்த்தியடையும் என்று சொல்கிறார்கள். இதற்கு முன்பு குந்தா திட்டம் எடுக்கும் போது, அது நிறைவேறினால், தமிழ் நாட்டின் தேவைகள் பூர்த்தியாகும் என்று சொன்னார்கள். ஆனால், இன்றைக்கு நம் தேவை அதிகரித்திருக்கிறது. ஆகவே, இன்னும் உள்ள திட்டங்களையும் நிறைவேற்றினாலும் தமிழகத்தின் தேவைகள் பூர்த்தியாகிவிடும் என்று சொல்லிவிட முடியாது. மேற்கொண்டு தேவைகள் வளர்ந்து கொண்டே இருக்கும். அதற்குக் காரணம் என்ன வென்றால்,

அதிகப்படியான தொழில்கள் வளர்வதன் காரணத்தினால், நமக்குத் தேவைப்படும் மின் சக்தியின் அளவு அதிகரித்துக் கொண்டே போகிறது. ஆகவே, இன்றைக்கு ஹொகெனக்கல் திட்டம் முடிவடைந்த பிறகும், அதிகமான தொழில் வளர்ச்சி ஏற்பட்டால், இந்த மின்சாரமும் குறைபாடாக இருக்கும் என்பதை நிச்சயமாக ஏற்றுக்கொள்ள வேண்டும். தமிழகத்தில் தொழில் அதிகமாக ஏற்பட்டிருக்கிறது என்பதைப் பற்றி யாரும் மறுக்க முடியாது. ஆனால், அரசியலுக்காக "தொழில் இங்கே வரவில்லை; தொழில் கொடுக்காத காரணத்திற்காக, தொழில் அமைச்சர் பதவியைக் கொடுத்தார்கள்" என்று அரசியல் ரீதியில் சொல்லலாமே தவிர வேறொன்றுமில்லை. தமிழ் நாட்டு மகனுக்கு மத்திய சர்க்காரில் தொழில் அமைச்சர் பதவி கிடைத்ததைக் கண்டு பெருமைப் பட்டிருக்க வேண்டுமே தவிர குறைகூறும் அளவில் "தொழில் அமைச்சர் பதவிதான் கொடுக்கப்பட்டிருக்கிறது" என்பதைக் கேட்க எந்த தமிழ் மகனும் வெட்கப்படாமல் இருக்க முடியாது என்று எதிர்க்கட்சி அங்கத்தினர்களுக்கு எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். தமிழகத்திலும் அதிகமான தொழிற்சாலைகள் ஏற்பட அறிகுறிகள் இருக்கின்றன. நெய்வேலித் திட்டம் நிறைவேறினால், எத்தனையோ திட்டங்கள் உருவாக இருக்கின்றன.

ஒவ்வொரு கிராமத்திலும், கிராம மக்கள் என்ன நினைக்கிறார்கள் என்றால், மின்சாரம் வந்துவிட்டால், சிறிய சிறிய தொழில் பேட்டையை வைக்கலாம் என்று. ஆகவே, நாளுக்கு நாள் மின்சாரத்தின் தேவை அதிகரித்துக் கொண்டேதான் இருக்கும். நம் மாநிலத்தின் சீப் எஞ்சினியர் குந்தாத் திட்டத்தை பெருமைபடக் கூடிய அளவில், எந்த மாநிலத்தையும்விட திறமையான அளவில் நிறைவேற்றியிருக்கிறார்கள். அதை நாம் பாராட்டாவிட்டாலும், வேறு நாட்டவர்கள், அந்த வேலையை ஆரம்பித்த

[Sri J. Matha Gowder] [5th May 1962

கானடா நாட்டவர்கள், பெருமைப்படும் அளவில் எவ்வளவோ திறமையாகச் செய்திருக்கிறார்கள் என்று பாராட்டியிருக்கிறார்கள். அந்த நிலையில் நாம் பாராட்டினால்தான் அவர்களுக்கும் உற்சாகம் இருக்கும்.

ஒன்றிரண்டு சிறு சிறு குறைகளையும் நீக்கி விட்டால், மிகவும் நலமாக இருக்கும் என்று சில யோசனைகளைச் சொல்ல விரும்புகிறேன். யோசனைகள் என்று சொல்லும்போது, எதிர்க் கட்சி அங்கத்தினர்கள் சொல்கிறார்கள், "போற்றுகிறார்கள், புகழ்கிறார்கள், ஆனால், குறை இருக்கிறது என்று சொல்கிறார்கள்" என்று. சாதாரணமாக போற்றக் கூடியதைப் போற்றி விட்டு, சிறு தவறுகள் இருப்பதையும் எடுத்துச் சொன்னால்தான், அவற்றை அகற்ற சர்க்கார் நடவடிக்கை எடுக்க முடியும். அது சர்க்காருடைய பொறுப்பு. அப்படி எடுத்துச் சொல்லத்தான் நாம் இங்கே அங்கத்தினர்களாக வந்திருக்கிறோமே அல்லாது, வெறுமனே போற்ற வேண்டிய நிலையில் மட்டும், சர்க்கார் தரப்பில் இருக்க வில்லையென்பதை எதிர்க் கட்சி அங்கத்தினர்களுக்கு எடுத்துச் சொல்ல விரும்புகிறேன்.

எனக்கு முன்பு பேசிய அங்கத்தினர் மின்சார இலாகா தொழிலாளிகள் வேலை நிறுத்தம் செய்ய நோட்டீஸ் கொடுத்து இருந்தார்கள் என்று குறிப்பிட்டார்கள். மின்சார இலாகா ஒரு அத்தியாவசியமான சர்வீஸ் ஆக இருப்பதால், எந்தக் காரணத்தைக் கொண்டும் அவர்கள் வேலை நிறுத்தம் செய்வது சட்ட விரோதமானது என்று கருத வேண்டும். மின்சார இலாகாவில் இருக்கக் கூடியவர்கள் வேலை நிறுத்தம் செய்தால், பலன் என்ன வாகும்? முன்னேற்றம் தடை படாதா? மின்சார வளர்ச்சி ஏற்பட வேண்டும் என்று சொல்லும்போது, இம்மாதிரியான காரியங்களுக்கு வேலை நிறுத்தத்திற்கு, ஊக்கம் கொடுக்கக் கூடாது என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அதே நேரத்தில் மின்சார போர்டில் வேலை செய்யக் கூடிய ஊழியர்களுக்கு பே கமிஷன் சிபாரிசின்படி சம்பளம் கொடுக்கப்பட்டு வருவதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அங்கே ஊழியர்களுக்கும் அதிகாரிகளுக்கும் நல்ல உறவு இருப்பதாகவும் சொல்லப்படுகிறது. இருந்தாலும் அங்கேயும் சில குறைகள் இருப்பதாகச் சொல்லுகிறார்கள். அங்கு உத்தியோகத்தில் இருக்கக் கூடியவர்களுடைய விஷயத்தில் சில குறைபாடுகள் இருப்பதாக எனக்கு தெரிய வருகிறது. அவைகளை கனம் அமைச்சருடைய கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். சாதாரணமாக மின்சார இலாக்காவில் லோயர் டிவிஷன் க்ளார்க் என்றும் அப்பர் டிவிஷன் க்ளார்க் என்றும் நியமிக்கிறார்கள். லோயர் டிவிஷன் க்ளார்க்காக சாதாரணமாக எஸ்.எஸ்.எல்.சி. படித்தவர்களைத்தான் நியமிக்கிறார்கள். ஆனால் அப்பர் டிவிஷன் க்ளார்க்குகளை நியமிக்கும்போது டைரெக்ட் ரெக்ரூட்மெண்டாக பி.ஏ., அல்லது பி.காம். பட்டதாரிகளைத்தான் நியமிக்கிறார்கள். மற்றும் சர்விஸ் கமிஷன் மூலமாகவும் நியமிக்கப்படுகிறார்கள். அப்பர் டிவிஷன் க்ளார்க்குகள் எஸ்.எஸ்.எல்.சி. படித்த பிறகு அதற்கு மேல் நாலைந்து ஆண்டு மேல் படிப்புப் படித்து விட்டு பட்டம் பெற்று வருகிறார்கள். அவர்களை நியமிக்

5th May 1962] [Sri J. Matha Gowder]

கும்போது அவர்களுடைய பட்டத்திற்கு மதிப்புக் கொடுத்து நியமிக்கப்படுகிறார்கள். சாதாரணமாக லோயர் டிவிஷன் க்ளார்க்குகளை நியமிக்கும்போது இவர்களையும் நியமிக்கிறார்கள். அப்படி நியமிக்கும்போது சாதாரணமாக 200 லோயர் டிவிஷன் க்ளார்க்குகள் இருந்தால் நாலைந்து அப்பர் டிவிஷன் க்ளார்க்குகள் இருக்கிறார்கள். இவர்களுக்கு ப்ரமோஷன் கொடுக்கும்போது வெயிட்டேஜ் என்ற முறையில் கொடுக்கிறார்கள். அப்படிக் கொடுப்பதால் பட்டம் பெற்ற நாலைந்து வருஷம் அதிகமாகப் படித்துவிட்டு வந்தவர்களுக்குப் பரமோஷன் கிடைப்பது என்பது அரிதாக இருக்கிறது. அதற்குள் லோயர் டிவிஷன் க்ளார்க்குகளாக வேலை பார்க்கக்கூடியவர்களுக்குப் ப்ரமோஷன் கிடைத்து விடுகிறது. ஏனென்றால், வெயிட்டேஜ் அனுபவம் முதலியவைகளைப் பார்த்து அவர்களுக்குப் ப்ரமோஷன் கொடுக்கப் படுகிறது. வெயிட்டேஜ் அனுசரித்து ப்ரமோஷன் கொடுக்கும்போது அப்பர் டிவிஷன் க்ளார்க்காக அமர்த்தப்பட்டவர்களுக்கு முன்னதாக ஒரு எஸ்.எஸ்.எல்.சி. யை அமர்த்தியிருந்தால் அவருடைய சர்வீசைப் பொறுத்து அவருக்குப் ப்ரமோஷன் கொடுக்கப்படுகிறது. அதனால் பட்டம் பெற்று குறைந்த அனுபவம் பெற்ற ஒரு அப்பர் டிவிஷன் க்ளார்க் இருந்தால் அவருக்குப் பரமோஷன் கிடைக்காமல் அவருக்குக் கீழ் வேலை பார்க்கும் லோயர் டிவிஷன் க்ளார்க்குக்குப் ப்ரமோஷன் கொடுக்கப் படுகிறது. அப்படிக் கொடுப்பதால் இவர் கூடிய சீக்கிரத்தில் சூப்பரிண்டெண்டெண்ட் அக்கொண்டண்ட் போன்ற பதவிக்கு அமர்த்தப்படுகிறார்கள். பட்டம் பெற்றவருடைய ப்ரமோஷன் தடைபடுகிறது. இன்னும் சில சமயங்களில் வெயிட்டேஜ் முறையில் ப்ரமோஷன் கொடுக்கும்போது சில லோயர் டிவிஷன் க்ளார்க்குகள் அவர் ரிடையர் ஆகும் வரையிலும் அவர் அதே பதவியில் இருக்கக்கூடிய நிலைமையும் ஏற்படுகிறது. ஆகவே இப்படி மின்சார போர்டில் ப்ரமோஷன் முறை இருப்பதால் அங்கு மனக் கசப்பு இருப்பதாகத் தெரிய வருகிறது. இதற்கு இடம் கொடுக்காமல் ப்ரமோஷன் கொடுக்கும் முறை நல்ல முறையாக அமைய வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். 1955-ஆம் ஆண்டு நியமித்த பத்து அல்லது பதினைந்து பேர்கள் இன்னும் அப்படியேதான் இருக்கிறார்கள். அப்பொழுது நியமிக்கப்பட்ட நாலைந்து அப்பர் டிவிஷன் க்ளார்க்குகளுக்கு முன் நியமிக்கப்பட்ட சுமார் 200 லோயர் டிவிஷன் க்ளார்க்குகள் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். அந்த 200 பேர்களுக்குப் ப்ரமோஷன் கொடுத்த பிறகுதான் இந்த நாலைந்து அப்பர் டிவிஷன் க்ளார்க்குகளுக்கும் ப்ரமோஷன் கிடைப்பதாக இருக்கிறது. பட்டம் பெற்று விட்டு நாலைந்து ஆண்டுகள் அதிகமாகப் படித்து விட்டு வந்தாலும் அவர்களுக்குப் ப்ரமோஷன் கிடைப்பதில் தடங்கல் இருப்பதாகத் தெரிய வருகிறது. ஆகவே இதைப்பற்றி மின்சார இலாகா விசாரித்து ஆவன செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். நான் சொல்வதில் தவறு இருந்தாலும் இருக்கலாம். இருந்தாலும் அந்த இலாகா அதிகாரிகளை இதைப்பற்றி விசாரிக்கச் சொல்லி தக்க நடவடிக்கை எடுத்துக் கொள்ளும்படியாகக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

[Sri J. Matha Gowder] [5th May 1962

இன்றைக்கு மின்சார இலாகாவிற்கு இருக்கக்கூடிய அமைச்சர் தொழில் மந்திரியாகவும் இருப்பதால் நமது நாட்டில் தொழில் வளருவதற்கு நல்ல வாய்ப்பு இருக்கிறது. இப்பொழுது மின்சார இலாகா ஒரு வியாபார இலாகாவாகக்கூட இருக்கிறது. கனம் அமைச்சர் தொழில் அமைச்சராகவும் மின்சார அமைச்சராகவும் இருப்பதால் நல்ல தொழிற்சாலைகளை ஏற்படுத்தக்கூடிய வாய்ப்பு இருக்கிறது. ஆகவே யாராவது தொழிலை அபிவிருத்தி செய்ய வேண்டும் என்று மின்சாரம் கேட்டால் அதை உடனே கொடுக்கக் கூடிய வாய்ப்பு இப்பொழுது ஏற்பட்டிருக்கிறது. இதற்கு முன்னதாக அநேகம் தோட்டத் தொழிலாளர்கள் தங்களுடைய வீடுகளுக்கு மின்சாரம் வேண்டும் என்று கேட்டால் அதைக் கொடுக்க முதலாளிகள் தயாராக இருந்தும் அவர்களால் தொழிலாளர்களுடைய வீடுகளுக்கு மின்சாரம் கொடுக்க முடியாத நிலைமையில் இருந்தார்கள். இப்பொழுது கனம் அமைச்சர் அவர்கள் மின்சாரத்திற்கும் தொழிலுக்கும் அமைச்சராக இருப்பதால் தொழிலாளர்களுடைய வீடுகளுக்கு மின்சாரம் வழங்க வேண்டும் என்று முதலாளிகள் கேட்டால் உடனே கொடுக்கக்கூடிய வாய்ப்பு ஏற்பட்டிருக்கிறது. ஆகவே இனிமேல் முதலாளிகள் மின்சாரம் வேண்டும் என்று கேட்டால் அதை உடனே கொடுக்கும்படியாக ஏற்பாடு செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். குறிப்பாக தேயிலை தோட்டத் தொழிலாளர்களுக்கு மின்சாரம் வழங்க வேண்டும் என்று கேட்டால் அவர்களுக்கு உடனே கொடுக்க ஏற்பாடு செய்யவேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். குறிப்பாக யாராவது தயாராக இருக்கிறேன் என்று சொன்னால் உடனே அவர்களுக்குக் கொடுக்கும்படியாகக் கேட்டுக்கொள்ளுகிறேன். இதற்கு முன்னதாக ட்ரான்ஸ்பார்மர் சரியாக இல்லை என்று சொல்லப்பட்டது. ட்ரான்ஸ்பார்மர் எத்தனையோ வருஷங்களுக்கு முன்னதாகப் போடப்பட்டது. அதைக் கவனித்து இன்னும் அதிகப் படியாக இப்போது போட வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். இப்பொழுது அதிகப்படியாக லோட் இருப்பதால் அப்பொழுது போட்ட ட்ரான்ஸ்பார்மர்கள் எல்லாம் சரியாகவே இல்லை. பல இடங்களில் ப்யூஸ் போய் விட்டது என்று சொல்லுகிறார்கள். ஆகவே இன்னும் அதிகப்படியாக ட்ரான்ஸ்பாரமர்களை அமைக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். இப்பொழுது ஹைடென்ஷன் வருவதால் ட்ரான்ஸ்பார்மர்களையெல்லாம் மாற்றி அமைக்கும்படியாக இருக்கிறது. ஆகவே தோட்டத் தொழிலாளர்களுக்கு மின்சாரம் கொடுக்கும்போது இப்பொழுது இருக்கக் கூடிய ட்ரான்ஸ்பார்மர்களையெல்லாம் மாற்றி அமைத்துக் கொடுக்கும்படியாக கேட்டுக்கொள்ளுகிறேன். ஏனென்றால் இப்பொழுது மின்சாரம் இலாகா ஒரு வியாபாரத் துறையாக இயங்கி வருவதால் கேட்கிறவர்களுக்கு மின்சாரம் வழங்கும்படியாகக் கேட்டுக் கொள்ளுகிறேன். இப்பொழுது அதிகப்படியான பாக்டரிகள் ஏற்படுவதால் ட்ரான்ஸ்பார்மர்களையெல்லாம் மாற்றி அமைத்துக் கொடுக்கும்படியாகவும் கேட்டுக்கொள்ளுகிறேன். ஏனென்றால்

5th May 1962] [Sri J. Matha Gowder]

இன்றைக்கு மின்சாரம் கொடுக்கக்கூடிய அளவு பல மடங்கு அதிகமாக ஆகி இருக்கிறது. பாக்டரிகள் அதிகமாக ஏற்படுத்தப் பட்டிருக்கின்றன.

அடுத்தபடியாக நீலகிரி மாவட்டத்திலும் சரி இன்னும் மற்ற கிராமங்களிலும் சரி கம்பிகளுக்கு மரப் போஸ்டு போடவேண்டாம் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். இதைப்பற்றி நான் ஏற்கெனவே மூன்று நான்கு ஆண்டு காலமாகச் சொல்லிக்கொண்டே வருகிறேன். மரப் போஸ்ட் போடுவதால் பல ஆபத்துக்கள் ஏற்படுகின்றன. மற்ற இடங்களில் எப்படி இருந்தாலும் நீலகிரியைப் பொறுத்த வரையில் அங்கேயெல்லாம் மரப் போஸ்ட்களை அமைக்க வேண்டாம் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அடிக்கடி நீலகிரி மாவட்டத்தில் புயல் காற்று அடிப்பதாலும் அதாவது நேற்று கோயம்புத்தூரில் அடித்தது போன்று நீலகிரியில் அடிக்கடி புயல் காற்று அடிக்கிறது, எதிர்பாராத விதமாக மழை வேறு பெய்கிறது. அதனால் அங்கு நடப்பட்டிருக்கும் மரப் போஸ்ட்கள் எல்லாம் கீழே விழுந்து விடுகின்றன. அப்படி விழுவதனால் பல ஆபத்துக்கள் ஏற்படுகின்றன. அவற்றை அங்குள்ள மக்களால் எடுக்க முடியவில்லை. அது சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்குச் சொல்லி அனுப்பி அவர்கள் வருவதற்குள் பல ஆபத்துக்கள் ஏற்பட்டு விடுகின்றன. இதில் மின்சாரம் ஓடுவதால் அங்குள்ள மக்கள் சாதாரணமாக அதை எடுக்க பயப்படுகிறார்கள். மின்சாரத்தைத் தொடுவதற்கு பயமாக இருக்கிறது. இதனால் கிராமத்து மக்கள் பல ஆபத்துக்களை அடைந்திருக்கிறார்கள். ஆகவே நீலகிரி சம்பந்தப்பட்ட வரையில் மரப் போஸ்ட்களை நடுவதை அறவே ஒழித்து விட வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். இரும்பு போஸ்ட்களைத்தான் அங்கு நட வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அதற்கு வேண்டிய நடவடிக்கையும் எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

இந்த இலாகாவை கனம் தொழில் அமைச்சர் அவர்களே நடத்துவதால் நம் நாட்டில் தொழில் முன்னேற்றமடைவதற்கு வேண்டிய வாய்ப்பு இருக்கிறது. அதற்கு என்னுடைய நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். இந்த இலாகா நல்ல முறையில் இயங்கி வருவதற்கும் என்னுடைய நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். அத்துடன் எனக்கு இப்பொழுது பேசுவதற்கு சந்தர்ப்பம் அளித்ததற்கும் என்னுடைய நன்றியைத் தெரிவித்துக்கொண்டு என்னுடைய உரையை முடித்துக்கொள்ளு கிறேன்.

* **Sri K. S. ARDHANAREESWARA GOUNDER :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்தச் சபையின் முன் வைத்திருக்கக்கூடிய மின்சார இலாகாவின் நிதி நிலை அறிக்கையை ஆதரித்து சில வார்த்தைகளைச் சொல்ல ஆசைப்படுகிறேன். தென்புடனும், தென்பு காட்டக்கூடிய முறையிலும் இந்த இலாகாவானது நல்ல முறையில்

[Sri K. S. Ardhanareeswara Gounder] [5th May 1962

நிர்வகித்து நடந்து வருகிறது என்பதை இந்த இலாகாவிலிருந்து கிடைக்கக்கூடிய புள்ளி விவரங்களிலிருந்து தெரிகிறது. குறிப்பாக முதல் ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் 23 கோடி ரூபாயில் ஆரம்பித்த இந்தத் திட்டமானது இப்பொழுது 233 கோடி ரூபாய்க்கு உயர்ந்திருக்கிறது என்றால் இந்த இலாகா எந்த அளவில் முன்னேற்றமடைந்திருக்கிறது என்பதைத்தான் காட்டுகிறது. குறிப்பாக ஹோகனக்கல் திட்டத்தைப் பொறுத்த வரையில் சென்ற பத்து ஆண்டு காலமாகவே அதைப்பற்றி எடுத்துச் சொல்லிக்கொண்டு வந்திருக்கிறோம். அதை எடுத்து நிறைவேற்றாமல் காலதாமதமாகிக் கொண்டு வந்தது. சென்ற ஆண்டில் காவிரியில் வந்த வெள்ளத்திற்குப் பிறகு, காவிரியில் வெள்ளம் எடுத்ததின் காரணமாக உடனடியாக இந்தத் திட்டம் எடுத்து பரிசீலனை செய்யப்பட்டது. இதை சர்க்கார் எடுத்து நடத்தக்கூடியதாக இருக்கிறது. அப்படி எடுத்து நடத்தினால் அது போற்றக் கூடிய திட்டம் தான் என்று சொல்லவேண்டும். 'மைசூர் சர்க்காரிடத்தில் இன்னும் பேச்சுவார்த்தை நடந்துகொண்டிருக்கிறது' என்று அமைச்சர் அவர்கள் அந்த அறிக்கையிலே சொல்லியிருக்கிறார்கள். பேச்சு வார்த்தையை எவ்வளவு சீக்கிரமாக முடிக்க முடியுமோ அவ்வளவு சீக்கிரமாக முடித்து, அந்தத் திட்டத்தை நிறைவேற்றினால், உண்மையிலேயே நம்முடைய மாகாணத்திலே எவ்வளவு மின்சாரம் உற்பத்தி செய்யப்படுகிறதோ, அதைவிட ஒன்றரை பங்கு அதிகமாக உற்பத்தி செய்யக்கூடும் என்பதை நன்றாக உணர வேண்டும். இதை முன்னதாக எடுத்து நிறைவேற்றியிருந்தால், சென்ற பத்து ஆண்டுக் காலமாக மின்சாரத் தட்டு இல்லாமல், நல்ல முறையில் மின்சாரத்தை விஸ்தரிக்க வாய்ப்பு இருந்திருக்கும்.

குறிப்பாக, சேலம் ஜில்லாவைப் பொறுத்த வரையில், சேலம்-ஈரோடு எலெக்ட்ரிஸிடி டிஸ்ட்ரிப்யூசன் கம்பெனியினால் அங்கிருக்கும் விவசாயிகளுக்கு மிகவும் பாதகம் ஏற்பட்டிருக்கிறது என்பதைப் பல தடவை இந்தச் சபையிலே சேலம் ஜில்லா அங்கத்தினர்கள் சொல்லி வந்திருக்கிறார்கள். சேலம் ஜில்லா பிற்போக்கான நிலையில் இருப்பதற்கும், பல கிராமங்களுக்கு மின்சாரம் கிடைக்காமலிருப்பதற்கும் காரணம் அந்தக் கம்பெனிதான் என்று நான் சொல்ல முடியும். அப்படியிருக்க, அந்தக் கம்பெனிக்கு கிட்டத்தட்ட 200 லட்ச ரூபாய் சர்க்கார் கடனாகக் கொடுக்கிறார்கள் என்றால், அது நல்லதல்ல என்று நான் கருதுகிறேன். நம்முடைய மின்சார இலாகாவில் மிகவும் திறமை வாய்ந்த இன்ஜினீயர்கள் இருக்கிறார்கள் ; தொழிலாளர்கள் இருக்கிறார்கள். அப்படியிருக்க மறுபடியும் அந்தக் கம்பெனிக்குக் கடன் கொடுக்கிறார்கள் என்றால், அதைப் பின்னால் சர்க்கார் எடுத்துக்கொள்ள நேரிடுகிறபோது, அவர்களுக்கு கொடுக்கவேண்டிய நஷ்ட ஈட்டுத் தொகை இன்னும் அதிகமாகப் போகும் என்று நான் கருதுகிறேன். ஆகவே, அந்தக் கம்பெனிக்குக் கடன் கொடுப்பதை உடனடியாக நிறுத்திவிட்டு, அதைச் சர்க்காரே எடுத்துக் கொள்ளவேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கிறேன்.

5th May 1962] [Sri K. S. Ardhanareeswara Gounder]

இந்தக் கம்பெனியிலிருந்து சில ஏரியாக்களைச் சர்க்கார் எடுத்து மின்சார விஸ்தரிப்பு செய்யவேண்டுமென்று கருதிக் கொண்டிருக்கும் நேரத்தில், மேட்டூர் வாய்க்கால் பிரதேசத்தில் பாசனம் இருப்பதால், 'மெயின்' வாய்க்காலுக்கு இரண்டு பர்லாங்குகளுக்குள்ளும், கிளை வாய்க்காலுக்கு ஒரு பர்லாங்குக் குள்ளும் மின்சார பம்ப் செட் வைத்துக் கொள்ள அனுமதி கொடுப்பதில்லை என்று திட்டம் வைத்திருக்கிறார்கள். இதனால் விவசாயம் பாதிக்கப்படுகிறது. அங்கு ஆறு மாதங்கள் கிணற்றிலே தண்ணீர் இருக்கும்போது, அந்தப் பிரதேசத்தில் இருக்கும் கிணறுகளுக்கு மின்சாரம் கொடுக்கவில்லையென்றால் உணவு உற்பத்தி பாதிக்கப்படும் என்று நான் கருதுகிறேன். ஆகவே, உடனடியாக இந்தத் தடையை நீக்கி, அங்கு பம்ப் செட் களுக்கு மின்சாரம் கொடுக்கவேண்டுமென்று கேட்டுக் கொள் கின்றேன்.

மேட்டூரில் மின்சார இலாகாவில் வேலை செய்யும் தொழிலாளர் களுக்கு வீட்டு வசதி இல்லாமலும், குடி தண்ணீர் வசதி இல்லா மலும், வீட்டிற்கு மின்சார விளக்கு வசதி இல்லாமலும் மிகவும் அவஸ்தைப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள் என்று பல சந்தர்ப் பங்களில் இந்தச் சபையில் எடுத்துச் சொல்லியுங்கூட, இன்னும் அந்தக் குறைபாடுகள் நீக்கப்படாமல் இருப்பதானது மிகவும் பிற்போக்குத் தன்மை என்றுதான் சொல்ல வேண்டும். அந்தக் குறைபாடுகளை உடனடியாக நிவர்த்திக்க வேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கின்றேன்.

மேட்டூர் தொழிற்சாலையில் இருக்கும் தொழிலாளிகள் அவர் களுக்குள்ள பல குறைபாடுகளைச் சொல்லியும், அவை தீர்க்கப் படாத காரணத்தால், அவர்கள் ஒரு நாள் அடையாள வேலை நிறுத்தம் செய்யவேண்டி ஏற்பட்டது என்று எனக்கு முன் பேசிய எதிர்க் கட்சி அங்கத்தினர் சொன்னார்கள். அதைச் சர்க்கார் நன்கு பரிசீலனை செய்து சில குறைபாடுகளை நீக்கக் கூடிய முறை யில் ஆவன செய்து, அவர்களுடைய வேலையைச் செய்ய அவர் களுக்கு ஊக்கம் அளிக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். பெரம்பூரிலுள்ள இரயில் பெட்டித் தொழிற்சாலையில் உற்பத்தியின் அளவுக்குத் தகுந்தாற்போல், எப்படி அங்குள்ள தொழிலாளி களுக்குக் கூலி நிர்ணயம் செய்யப்பட்டிருக்கிறதோ அதே மாதிரி மேட்டூரிலுள்ள மின்சாரத் தொழிற்சாலையிலும், உற்பத்திக்குத் தகுந்தாற்போல் கூலி நிர்ணயம் செய்தால், தொழிலாளிகள் உற்சாகத்தோடு வேலை செய்ய முடியும் என்று தெரிவித்துக் கொள்கிறேன். அதைச் செய்யவேண்டுமென்றும் கேட்டுக் கொள்கிறேன்.

மின்சார இலாகாவைப் பொறுத்தவரையில், மின்சார போர் டாக இல்லாமல், அது ஏற்கனவே எப்படி மின்சார இலாகாவாக இருந்ததோ, அதே மாதிரி வைத்திருந்தால், இந்த இலாகா இன்னும் நல்ல முறையில் நடப்பதற்கு ஏதுவாக இருக்கும். ஏதோ வேறு மாகாணத்தில் ஏற்படுத்தியதைப் பார்த்து நம்முடைய மாகாணத்திலும் கொண்டுவந்து புகுத்தியிருப்பது

அவ்வளவு நல்லதல்ல. மின்சார போர்டாக இல்லாமல் மின்சார இலாகாவாக இருந்தால் இன்னும் அதி விரைவில் கிராமப் புறங் களில் மின்சாரத்தை விஸ்தரிக்க நல்ல வாய்ப்பு இருக்கும் என்று நான் தெரிவித்துக் கொள்கின்றேன்.

நம்முடைய மின்சார இலாகாவைப் பல கோடிக் கணக்கான ரூபாய் செலவில் திட்டமிட்டு விரிவுபடுத்திக் கொண்டிருக்கும் இந்த நேரத்தில், அந்த இலாகாவில் தொழிலாளர்களை 'என்.எம்.ஆர்.' என்றும், 'டெய்லி வேஜஸ்' என்றும் வைத்துக் கொண்டிருப்பது அவ்வளவு நல்லதல்ல. அவர்கள் நிரந்தரத் தொழிலாளர்களாகப் பணி செய்வதற்கு நல்ல வாய்ப்பு கொடுத் தால், அவர்கள் இன்னும் அதி விரைவில் திட்டத்தை நிறைவேற்று வதற்கு உற்சாகமுள்ளவர்களாக இருப்பார்கள் என்று நான் தெரிவித்துக் கொள்கிறேன்.

மேட்டூர் தொழிற்காலையில் இருக்கும் இரும்புச் சாமான்களை ஏற்றிக் கொண்டு செல்வதற்கு காண்ட்ராக்ட் ஸிஸ்டத்தில் விட்டிருக்கிறார்கள். 'ட்ரான்ஸ்போர்ட்டை' அங்கிருக்கும் தொழிலாளர்களைக் கொண்ட கூட்டுறவு சொஸைட்டியாக அமைத்துவிட்டால், அது இன்னும் நல்ல முறையிலே லாபகரமாக இருக்கும். சர்க்காருக்கும் அதிக வருவாய் கிடைக்க வாய்ப்பு இருக்கும்.

மேட்டூரில் கால்வனைஸிங் பாக்டரி இருக்கிறது. அங்கே 'ஸ்ட்ரக்சரல்' வேலையும், 'கால்வனைஸிங்' வேலையும் செய்கிறார்கள். மைசூர் மாகாணத்தில் இருக்கும் மின்சார இலாகாவினர் அந்த பாக்டரிக்கு சாமான்கள் கொடுத்துக்கொண்டிருக்கிறார்கள். அந்த நிலைமையை மாற்றி, தொழிற்சாலைக்குப் பக்கத்திலே இருக்கும் நம்முடைய மின்சார இலாகாவினரே கால்வனைஸிங் பாக்டரிக்கும், ஸ்ட்ரக்சரல் பாக்டரிக்கும் வேண்டிய சாமான்களைக் கொடுத்தால், தொழிலாளர்களுக்கு தொடர்ந்தாற்போல் வேலை கிடைத்துக் கொண்டிருக்கும். தொழிலாளர்களை வேலையிலிருந்து நீக்கக் கூடிய நிலைமை இருக்காது. அந்தத் தொழிற்சாலை நல்ல முறை யில் நடக்க வேண்டுமென்றால், நம்முடைய மின்சார இலாகாவி லிருந்து அதற்கு வேண்டிய சாமான்கள் கொடுக்கப்படவேண்டும். நம்முடைய மாகாணத்தைவிட்டு வெளி மாகாணத்திலிருந்து சாமான் வாங்கி வேலை செய்வதால் அடிக்கடி அங்கு இருக்கும் தொழிலாளிகளுக்கு வேலை வாய்ப்பு இல்லாமல் போகிறது என்பதைச் சர்க்காருடைய கவனத்திற்குக் கொண்டுவர விரும்பு கிறேன்.

மேட்டூரில் உள்ள தொழிற்சாலையில் வேலை செய்துவந்த நூற்றுக்கும் அதிகமான தொழிலாளர்களை சென்ற மாதத்தில் வேலையிலிருந்து நீக்கியிருப்பதாக நான் கேள்விப்படுகிறேன். அந்த இலாகா விரிவடையக்கூடிய முறையில், பக்கத்தில் இருக்கும் குகை மின்சாரத் திட்டத்திலோ அல்லது 'ட்ரான்ஸ்போர்ட்' வேலையைக் கூட்டுறவு முறையில் தொழிலாளர்களுக்கு கொடுத்தால் வேலைவாய்ப்பு இல்லாத தொழிலாளர்களுக்கு வேலை கிடைக்க

5th May 1962] [Sri K. S. Ardhanareeswara Gounder]

நல்ல வசதி ஏற்படும். தொழிற்சாலையிலிருந்து நீக்கப்பட்டவர்களுக்கு நம்முடைய இலாகாவிலோ அல்லது வேறு எங்காவது உடனடியாக வேலை வாய்ப்பு ஏற்படுத்திக் கொடுக்கவேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கிறேன்.

புதிதாக வந்திருக்கக்கூடிய குகை மின்சாரத் திட்டத்தில் வேலை செய்யக்கூடியவர்களுக்கு மேட்டூரில் பல வீடுகள் கட்டப்பட்டிருக்கக்கூடிய நேரத்தில், மெயின்டினென்ஸ் டிபார்ட்மெண்டில் இருக்கும் தொழிலாளர்களுக்கு வீட்டு வசதி இல்லாமல் இருக்கிறது. 1924-ம் வருஷத்தில் மேட்டூர் அணை கட்டப்பட்ட போது அமைக்கப்பட்ட வீடுகளில் அவர்கள் வசித்துக் கொண்டிருக்கிறார்கள். தலைமேல் இடிந்து விழக்கூடிய நிலைமையில் அந்த வீடுகள் மோசமாக இருக்கின்றன. ஆகவே, உடனடியாக அவற்றைப் பழுது பார்க்கவேண்டும். இல்லையென்றால், அந்த வீடுகளையெல்லாம் இடித்துவிட்டு, புதிதாக அங்கிருக்கும் தொழிலாளர்களுக்கு நல்ல வீட்டு வசதி செய்து கொடுக்கவேண்டுமென்று நான் தெரிவித்துக் கொள்கிறேன்.

நான் அதிகம் சொல்ல வேண்டியதில்லை. மதிப்பிற்குரிய அமைச்சர் அவர்கள், மேட்டூரிலுள்ள மின்சார இலாகா தொழிலாளர்களின் தலைவராக இருந்திருக்கிறார். ஆகவே, அந்தத் தொழிற்சாலையில் இருக்கும் தொழிலாளர்களுடைய நிலைமை அவருக்கு நன்றாகத் தெரியும். என்ன குறைபாடுகள் இருக்கின்றன என்பதை அவர்கள் நன்றாக உணர்வார்கள். உடனடியாக அந்தக் குறைபாடுகளை நீக்கி நல்ல முறையில் அங்கு உற்பத்தியைப் பெருக்குவதற்கு வேண்டிய வாய்ப்புத் தரவேண்டுமென்று நான் அவர்களைக் கேட்டுக்கொண்டு என்னுடைய உரையை முடித்துக் கொள்கின்றேன்.

* **SRI K. A. MATHIALAGAN :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கனம் தொழில் அமைச்சர் அவர்கள், மின்சார ஸ்தாபனத்தின் நிதி நிலை அறிக்கையையொட்டி துவக்கி வைத்த இந்த விவாதத்தில் நானும் என்னுடைய சில கருத்துக்களை கூற விரும்புகிறேன் நம்முடைய மாநிலத்தைப் பொறுத்தவரையில் 1928-ஆம் ஆண்டில் மின்சார அமைப்பு ஏற்பட்டதில் இருந்து இன்று வரையில் அத்துறை நல்ல முறையில் முன்னேற்றம் அடைந்து வருகிறது. நல்ல பல திட்டங்களை நிறைவேற்றியிருக்கிறது. மின்சாரத்துறை இலாகா இப்படிச் சிறப்பாகப் பணியாற்றி வருகிற காரணத்தினால் தான் இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களை அமைச்சர் அவர்கள் நிறைவேற்றி பெருமை அடைந்திருக்கிறார்கள். அந்தப் பெருமையை ஒத்துக்கொள்வதில் திராவிட முன்னேற்றக் கழகம் என்றைக்கும் தயங்காது என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

11-00 a.m.

மின்சாரச் துறையில் சிறந்த என்ஜினியர்கள், பணியாளர்கள் இருக்கிற காரணத்தினால்தான் பல அற்புதமான காரியங்களை, திட்டங்களையெல்லாம் சாதித்திருக்கிறோம். அதற்காக இந்த நேரத்தில் அவர்களைப் பாராட்டுவதற்குக் கடமைப்பட்டிருக்கிறோம்.

[Sri K. A. Mathialagan] [5th May 1962

இப்படிச் சொல்கிற நேரத்தில் அமைச்சர் அவர்கள் தம்முடைய உரையில் குறிப்பிட்டிருக்கிற ஒரு விஷயத்தைக் கவனிக்க வேண்டும். மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தின் இறுதி கட்டத் திற்குப் போகிற நேரத்தில் நம்முடைய மாநிலத்தின் மின்சக்தித் தேவை 1,579,000 கி.வா. ஆக இருக்கும். ஆனல் நமது உற்பத்தித் திறன் 913,000 ஆக இருக்கும். ஆகவே, 666,000 கி.வா. பற்ருக் குறையாக இருக்கும் என்று சொல்லியிருக்கிருர். இப்படி பற்ருக் குறை விழுவது தெரிந்தும் கூட இதை எவ்வாறு சமாளிப்பது என்பதைப்பற்றி மின்சார போர்டின் நிதி நிலை அறிக்கையிலோ, மின்சாரத் துறை அமைச்சரின் உரையிலோ எதிர்க்காலக் கண்ணேட்டத்தோடு எதுவும் குறிப்பிடப்படவில்லை. தென்னகத் திலே அணு மின் உற்பத்தி நிலையம் ஏற்படுத்துவதற்கு என்ன வழி வகைகள் செய்யப்பட்டிருக்கின்றன என்ற விளக்கம் தரப்பட வில்லை. பர்ணசாலை முனிபுங்கவர்கள் பேசுவது போல நம்பலாம் இருக்கலாம் என்பதாக எல்லாவற்றையுமே சொல்லிவிட்டுப் போவதில் பயன் இல்லை. சமீபத்தில் கடந்த வாரத்தில் அணு சக்திக் கமிஷன் டாக்டர் பாபா தலைமையில் நமது முதல் அமைச்சர் அவர்களைச் சந்தித்துப் பேசியிருக்கிறது. அவர்கள் என்ன சொன்ஞர்கள், இவர்கள் என்ன எடுத்துச் சொன்ஞர்கள் என்கிற விளக்கம் தரப்படவில்லை.

நம்முடைய எண்ணங்கள் எல்லாம் வெறும் ஆசைகளாகவே போய்விடக் கூடாது. அவற்றை நிறைவேற்றவேண்டியது மிகவும் அவசரமான, அவசியமான பிரச்னையென நான் தொழில் அமைச்சர் அவர்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறேன். மூன்ருவது திட்டத்திற்கு 291 கோடி கேட்டோம், 191 கோடிதான் கிடைத்தது! இரண்டாவது திட்டத்தில் ஹெவி எலெக்ட்ரிகல்ஸ் சம்பந்தமாக ஆவடியில் நாம் நிறுவ நினைத்த தொழிற்சாலை வெறும் ஆசையாயிற்று. அதை போபாலுக்குக் கொண்டுபோய் விட்டார்கள். அப்படியில்லாமல் இவர்களே தென்பிராந்திய மண்டலம் என்று சொல்லப்படுகிற திராவிட நாடாகிய இந்த தமிழ்நாடு, கேரளம், ஆந்திரம், கர்நாடகம் ஆகிய பிரதேசங்களுக் காக 4 அணு மின்சக்தி நிலையங்களை ஏற்படுத்துவதற்கு நமது தொழில் அமைச்சர் அவர்கள் மிகவும் வற்புறுத்த வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். தென் மாநிலங்களின் சார்பாக தென் மண்டல கவுன்சிலை அரங்கமாக்கி, மக்கள் தொகை அடிப்படையில் அணு மின்சக்தி நிலையங்கள் அமைக்க ஆற்றல் நிறைந்த நமது தொழிலமைச்சர் போராடவேண்டும். முன்பு நாஷனல் டெவலெப் மெண்டு கவுன்சிலில் அவர்கள் தொழில்கள் புறக்கணிப்பு சம்பந்த மாக பேசிய பேச்சு என் காதுகளில் ரீங்காரம் செய்துகொண்டிருக் கிறது. ரீஜனல் டிஸ்பர்சல் ஆப் இண்டெஸ்டிரி என்று அவர்கள் பேசின அடிப்படையிலேயே இப்போதும் அணு மின்சக்தி நிலையம் சம்பந்தமாக நாம் புறக்கணிக்கப்படாமல் இருக்க தென்மண்டல கவுன்ஸில் உறுப்பினராக இருக்கக் கூடிய நமது தொழில் அமைச்சர் அவர்கள் தக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும்.

5th May 1962] [Sri K. A. Mathialagan]

அதேபோல் காமன் க்ரிட்—சம்பந்தமாக தமிழ்நாடு, மைசூர், கேரளம், ஆந்திரப் பிரதேசம் ஆகிய நான்கு மாநிலங்களுக்கும் இடையேயான இணைப்பு வேலைபற்றி ஆராய்ந்து வருகிறது என்றால், இப்போது எந்த கட்டத்தில் இருக்கிறது? எப்போது வரும் என்பது ஒன்றும் தெரிவிக்கப்படவில்லை. மூன்றாவது திட்ட இறுதியில் நமக்கு ஏற்படுகிற மின் பற்றாக்குறை காரணமாக எவ்வளவு பெரிய விபத்து ஏற்படும் என்பதை அமைச்சர் அவர்களே அறிவார்கள். அந்தப் பற்றாக்குறையை நீக்குவதற்கான திட்டத்தைத்தான் நாம் தீவிரமாக வற்புறுத்தவேண்டும். இப்போது மின்சார போர்டின் கீழ் உற்பத்தியாகிற மின்சக்தி 85 சத விகிதம் விநியோகிக்கப்படுகிறது. பாக்கி 15 சத விகிதம் லாபத்திற்காக மின்சக்தியை வாங்கி விநியோகம் செய்கிற தனியார் கம்பெனிகளிடமிருக்கிறது என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். தஞ்சாவூர், திருவாரூர், நாகப்பட்டிணம், கும்பகோணம், ஸ்ரீரங்கம், திருநெல்வேலி போன்ற இடங்களில் சௌத் மெட்ராஸ் எலக்டிரிக் சப்ளை கார்ப்பரேஷன் என்றும், சேஷசாயி கம்பெனி யென்றும், ஈரோடு-சேலம் எலக்டிரிக் கார்ப்பரேஷன் என்றும் இன்றைய தினம் தனியார் லாபத்திற்காக நடத்தும் கம்பெனிகளிடமே ஏன் அந்த 15 சத விகிதம் மின்சக்தி விநியோகப் பொறுப்பை இன்னமும் ஒப்படைத்திருக்கவேண்டும் என்று கேட்கிறேன். அவர்களிடம் இருப்பதனால் சரியான முறையில் அவை விஸ்தரிக்கப்படவில்லை. நாம் கடன் உதவி அளிக்கிறபோதும் கூட அவர்கள் சரியாக வேலை செய்ய வில்லை. ஆகவே தனியார் கம்பெனிகளிடமிருக்கும் விநியோகப் பொறுப்பை எல்லாம் மின்சார போர்டே எடுத்துக் கொள்ளவேண்டும். அந்தக் கம்பெனிகளை தேசியமயமாக்க வேண்டும் என்று வற்புறுத்துகிறேன். 1,600 கிராமங்களுக்கு மின்வசதி அளிக்க திட்டமிடப்பட்டிருக்கிறது என்றால் இது பெருமைக்குரிய விஷயமாக இருக்கலாம். இதில் ஹாம்லட்டெல்லாம் சேர்ந்திருக்கும். குக்கிராமம், கிராமம், நகரம் ஆகிய எல்லாம் சேர்ந்து 50 ஆயிரம் இருக்கிறது. இதில் இவர்கள் ஒட்டு மொத்தமாகச் சொல்லியிருக்கிறார்கள் என்று நினைக்கிறேன். எல்லா கிராமங்களுக்கும் மின்விசை அளிக்கக் கூடிய ஒரு லட்சியத் திட்டத்தை நிறைவேற்றுவதற்குப் போதிய கவனம் செலுத்தப் படவேண்டும் என்று இந்த நேரத்தில் சொல்லக் கடமைப்பட்டிருக் கிறேன்.

"The Budget Estimate for 1962-63 has been limited to Rs. 4,47.26 lakhs due to the ceiling fixed for power by the Planning Commission even though the same physical targets as for 1961–62 have been proposed. However with the additional funds expected to be made available by the State Government during 1962–63 the physical targets are expected to be achieved fully."

ஏழு கோடியிலிருந்து 4 கோடியாகக் குறைந்திருக்கிறது. ப்ளானிங் கமிஷன் உச்ச வரம்பு விதித்திருக்கிறது. துண்டு விழும் தொகை எங்கே கிடைக்கப்போகிறது என்பதற்கும், எப்படிச் செய்யப்போகிறார்கள் என்பதற்கும் அமைச்சர் அவர்கள் விளக்கம் சொல்ல கடமைப்பட்டிருக்கிறார்கள்.

[Sri K. A. Mathialagan] [5th May 1962

மின்சார கேபிள்கள், வையர்கள், லாந்தர் கம்பங்கள் போன்ற வற்றையெல்லாம் ஆண்டுதோறும் டில்லி எலக்டிரிகல் கம்பெனி யிலிருந்தும், பம்பாய் கமானி கம்பெனியிலிருந்தும், ஹிராகுட்டி லிருந்தும், கல்கத்தாவிலிருந்தும் பலகோடி ரூபாய் செலவு செய்து வாங்குகிறார்கள். இந்த மாகாணத்திலேயே அந்தப் பொருள்களை உற்பத்தி செய்யக் கூடிய தொழிற்சாலையை நிறுவி னால் பல கோடி ரூபாய் நமக்கு மிச்சமாகும்.

இன்றைக்கு நார்வே, ஸ்விடன், இங்கிலாந்து, கனடா, அமெரிக்கா போன்ற நாடுகளில் மின்சாரமானது நபர் ஒன்றுக்கு 2,000 முதல் 3,000 யூனிட் வரை கிடைக்கக் கூடிய விதத்தில் உற்பத்தி செய்யப்படுகிறது. இதனை ஐரோப்பியக் கண்டத் திற்கும், ஐக்கிய நாடுகள் சபைக்கும் சென்று வந்த நமது தொழில் அமைச்சர் அறிவார்கள். ஆனால் நம்முடைய மாநிலத்திலோ நபர் ஒன்றுக்கு 62 யூனிட் கிடைக்கிற அளவுக்குத்தான் மின்சாரம் உற்பத்தி செய்யப்படுகிறது. இது பெருமைப்பட்டுக் கொள்கிற அளவுக்கு உள்ள பெரிய லட்சிய அளவு அல்ல. இந்த வகையில் இவைகளையெல்லாம் எதிர்காலக் கண்ணோட்டத்தோடு பார்த்து தென் மாநிலங்கள் நான்கின் நிலைமையையும் கொண்டு அமைச்சர் அவர்கள் திட்டம் தீட்ட வேண்டுமென்று கூறி என்னுடைய உரையை முடித்துக் கொள்கிறேன்.

* **Sri P. PALANI PILLAI** : பேரன்பு மிக்க உதவி சபாநாயகர் அவர்களே, இந்த மா மன்றத்திலே கனம் மின்சார அமைச்சர் அவர்களால் வெளியிடப்பட்டிருக்கிற அறிக்கையை ஆதரித்து . . .

**Mr. DEPUTY SPEAKER** : அங்கத்தினர் பேச்சை ஆரம் பிக்கும்போது 'சபாநாயகர் அவர்களே,—உதவி சபாநாயகர் அவர்களே' என்று சொன்னால் போதும். 'அன்புமிக்க சபாநாயகர் அவர்களே' என்று சொல்ல வேண்டியதில்லை.

**Sri P. PALANI PILLAI** : மின்சார அமைச்சரால் கொண்டு வரப்பட்டிருக்கிற நிதி நிலை அறிக்கையின் மீது இரண்டொரு வார்த்தைகளைக் கூற ஆசைப்படுகிறேன். எனக்கு முன் பேசிய மாற்றுக் கட்சி தோழர்கள் இந்த வகையில் நாம் இன்னும் வளர்ச்சி அடையவேண்டுமென்று பேசினார்கள். நாம் இப்போது வளர்ச்சி அடையும் கட்டத்தில்தான் இருக்கிறோம். மின்சாரத் தில் மேலும் வளர்ச்சி பெற, கனம் அமைச்சர் அவர்கள் இன்னும் நல்ல முறையில் பணியாற்ற வேண்டுமென்று வேண்டுகோள் விடுத்தது உண்மையிலேயே பாராட்டப்பட வேண்டிய ஒன்று. அது எவ்வாறு நிறைவேற்றப்பட வேண்டும்? அதற்கு முக்கிய அடிப்படை என்ன? பணம் இல்லாமல் எந்தவிதத் திட்டத்தையும் நிறைவேற்ற முடியாது என்பதை கவர்னர் உரையிலேயே நான் எடுத்துக் கூறினேன். திட்டங்களை நிறைவேற்றப் பணம் வேண்டு மென்றால் அதற்கு வரி போட வேண்டும். வரி போட்டால் மாற்றுக் கட்சித் தோழர்கள் வெளியிலே போய் 'வரி போடுகிறார் கள்' என்று பிரசாரம் செய்கிறார்கள். உள்ளே வந்து திட்டங்களை

5th May 1962] [Sri P. Palani Pillai]

யெல்லாம் பெரிய அளவில் நிறைவேற்ற வேண்டுமென்று சொல்கிறார்கள். எந்தவகையிலே வருவாய்க்கு வழி செய்யவேண்டுமென்று அவர்கள் எடுத்துக் கூறுவார்களேயானால் அதையும் வரவேற்க நாங்கள் கடமைப்பட்டிருக்கிறோம்.

கனம் மின்சார அமைச்சர் அவர்கள் பெரு முயற்சி எடுத்துக்கொண்டு நம்முடைய மாகாணத்தில் அணுசக்தி மின் நிலையத்தை ஏற்படுத்த முனைந்திருக்கிறார்கள். மத்திய அரசாங்கம் இந்தத் திட்டத்தை ஏற்றுக்கொண்டு அணு சக்தி மின் நிலையத்தைத் தமிழ்நாட்டில் ஏற்படுத்த ஒப்புக்கொண்டிருக்கிறார்கள்.

வட ஆற்காடு மாவட்டத்தைப் பொறுத்த வரையில் ஒரு சில இடங்களிலே ஒரு குதிரை வேகத்திற்கு 50 ரூபாய் மினிமம் காரண்டியாகவும், ஒரு சில இடங்களிலே 35 ரூபாயாகவும் வசூலிக்கிறார்கள். இந்த ஏற்றத் தாழ்வு குறைந்த அளவில்தான் இருக்கிறது. இதை ஒரேமாதிரியாக, 35 ரூபாய் அளவில் வசூலிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்து, திருவண்ணாமலை சாத்தனூர் நீர்த்தேக்கத்தில் இருந்து வருகின்ற கால்வாய் அருகில் உள்ள பகுதிகளில் கிணறுகளில் இருந்து தண்ணீர் இறைக்க மின்சாரம் கொடுக்க மறுக்கிறார்கள். அந்தப் பகுதிகளில் கிணறுகளில் இருந்து தண்ணீர் இறைக்க மின்சாரம் வழங்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

எனக்கு முன்னதாகப் பேசிய மாற்றுக் கட்சி நண்பர் வேலை நிறுத்தம் செய்யப்பட்டதைப் பற்றியும், அறிக்கை விடப்பட்டது பற்றியும் குறிப்பிட்டார்கள். எங்கள் கட்சியைச் சார்ந்த ஒரு அங்கத்தினர் கூறியதுபோல் அத்தியாவசியமான பணியில் உள்ளவர்கள் வேலை நிறுத்தம் செய்வதை அனுமதிக்கக் கூடாது. அவர்கள் வேலை நிறுத்தம் செய்வதன் காரணமாக பல தொழில்களுக்குக் குந்தகம் ஏற்படும். இப்போது மின்சார போர்டில் ஒரு சில ஜில்லாக்களில் கடை நிலை ஊழியர்களை வேலையிலிருந்து நீக்கப்பட்டு விட்டதாகக் கூறப்படுகிறது. அது பற்றி ஆராய்ந்து வேண்டிய பரிகாரத்தைச் செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

மின்சார போர்டை பொறுத்த அளவில் அது ஒரு வியாபார ஸ்தாபனத்தைப் போல் இயங்குவதால் சில தொல்லைகள் இருக்கின்றன என்று கருதுகிறேன். வியாபார ஸ்தாபனமாக இருந்தால் கூட அது மக்களுக்குப் பெருத்த அளவிலே நன்மை செய்யக் கடமைப்பட்டிருக்கிறது. இந்தச் சந்தர்ப்பத்தில், வேலை இழந்தவர்களுக்கு மீண்டும் வாய்ப்புக் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டு, இந்த அறிக்கையின் மீது பேச வாய்ப்பளித்ததற்காக உதவி சபாநாயகர் அவர்களுக்கு என்னுடைய நன்றியையும், வணக்கத்தையும் தெரிவித்துக்கொண்டு என்னுடைய உரையை முடித்துக் கொள்ளுகிறேன்.

**Sri P. K. MUTHUVELAPPA GOUNDER** : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த மின்விசைத் திட்டம் குறித்து, தமிழ்நாட்டில் நமது அமைச்சர் அவர்களும், அதிலுள்ள மேல் அதிகாரி

[Sri P. K. Muthuvelappa Gownder] [5th May 1962

களும், தொழிலாளர்களும் செய்துள்ள சேவையை நான் பாராட்டு கிறேன். பத்து ஆண்டுகளுக்கு முன்னர் 7,000 கனெக்ஷன் ஓடிக் கொண்டிருந்தது. இப்பொழுது 130,000-க்கு மேல் கனெக்ஷன் ஓடுகின்றன என்றால் அது ஆச்சரியப்படத்தக்கதாகவும், பாராட்டத்தக்கதாகவும் இருக்கின்றன. விவசாயிகள் காலையில் எழுந்து 4 மணிக்கு கவலைப் பூட்டினால் அதை இழுத்து இழுத்து முழங்கால் முட்டி பாய்ந்து அவர்கள் அவதிப்பட்டுக்கொண்டிருந் ததைப் போக்கிய அமைச்சர் அவர்களுக்கும், மேல் அதிகாரி களுக்கும், அதில் சம்பந்தப்பட்ட ஊழியர்களுக்கும் அந்தப் புண்ணியம் உரியதாகும். அந்த முறையில் விவசாயிகள் வரப்பிரசாதம் பெற்றிருக்கிறார்கள். அவனுசி, நம்பியூர், புளியம் பட்டி போன்ற இடங்களில் மழையின்றி கிணறுகளில் தண்ணீர் இல்லாததால் அவர்கள் மினிமம் காரண்டி கட்ட முடியவில்லை. அதற்காக எங்களுக்கு உதவி செய்யவேண்டுமென்று அவர்கள் கேட்டுக் கொண்டதின் பேரில் அது 50 ரூபாயிலிருந்து 30 ரூபாயாக குறைந்திருப்பதாக உத்தரவு அளிக்கப்பட்டிருப்ப தாகத் தெரிகிறது. அதில் 61-க்கு அப்புறம் மோட்டார் வைத்திருப் பவர்களுக்கு இப்படி குறைக்க முடியாது, அதற்கு முன்னதாக வைத்திருப்பவர்களுக்குத்தான் குறைக்கப்படும் என்று நோட்டீஸ் கொடுத்து வற்புறுத்திக் கொண்டிருக்கிறார்கள். பொதுவான ஒரு உத்தரவு போட்டும் கூட அதைக் கவனியாது இப்படிச் செய்வதின் காரணம் என்னவென்று தெரியவில்லை. மழைபெய்யாது மினிமம் காரண்டியைக் குறைக்கவேண்டுமென்று சொல்லி வருகிற விவசாயி களுக்கு, அந்த ஏரியாக்களுக்கு மட்டும் குறைக்கிறார்கள். ஒன்றும் தெரியாத அப்பாவிகளாக இருக்கும் விவசாயிகள், அமைச்சர் அவர்களிடமோ அல்லது அதிகாரிகளிடமோ தங்கள் குறைகளைச் சொல்லிக் கொள்ள திறமையற்றவர்கள் பூரா மினிமம் காரண்டி யும் கட்டும்நிலையில் அவதிப்படுகிறார்கள். ஆகவே மினிமம் காரண்டியைப் பொதுவாக எல்லாயிடங்களுக்கும் குறைத்து, அதிகமாக கிடைக்கும் இடங்களில் உள்ளவர்கள் தானாகவே அதற் குரியதை கொடுக்கத் தயாராயிருக்கிறார்கள். ஆகவே அதற்குரிய திட்டத்தை வகுக்கவேண்டுமென்று அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன். பின்னர், விவசாயத்திற்கு இரவில் தண்ணீர் கொடுக்கிறார்கள். இரவில் கம்பு, சோளம் இவைகளுக்கு தண்ணீர் கட்டும்போது பாம்பு, பூச்சி போன்றவைகளால் கடிக்கப் பட்டு விவசாயிகள் ஆபத்திற்குள்ளாகிறார்கள். ஆகவே, விவசாயத்திற்கு காலையில் மின்சாரம் கொடுக்கவேண்டும், அப்படிச் செய்வதால் அவர்களுக்கு உதவியாகயிருப்பதோடு விவசாய உற்பத்தியும் பெருகும்.

அடுத்தபடியாக, லோயர் பவானி ஏரியாவில் ஒரு பர்லாங்குக்கு அப்புறம் இருக்கும் கிணறுகளுக்கு மின்விசை கொடுக்கப்படு கிறது. வாய்க்காலுக்கு பக்கத்தில் ஒரு பர்லாங்குக்கு உட் பட்டிருக்கும் இடங்களுக்கு மின்விசை கொடுக்க முடியாது என்று அரசாங்கம் உத்தரவிட்டிருப்பதாகத் தெரிகிறது. வாய்க்காலுக்கு பக்கத்தில் கொடுத்தால் அதன் ஸ்பிரிங் அதிகவேகமாக இழுத்து

5th May 1962] [Sri P. K. Muthuvelappa Gounder]

விடும் என்ற நோக்கத்தில் கொடுக்கப்படுவதில்லை என்று சொல்லப் படுகிறது. அதன் பக்கத்தில் கிணறுகளில் என்ஜின் வைத்து இறைக்கிறார்கள். அப்பொழுது ஸ்பிரிங்க்கு அதிக டென்ஷன் ஏற் படாதா? மோட்டார் வைத்துக் கொண்டால்தான் அந்த சக்தியா? ஆகவே இதைப்பற்றி நன்கு ஆலோசித்து எல்லா இடங்களிலும் மோட்டார் அமைத்துக்கொள்ள ஏற்பாடு செய்ய வேண்டும். ஓடிக் கொண்டிருக்கும் நிலையிலுள்ள கிணறுகளில் மோட்டார்கள் அமைக்கும்படி செய்து விட்டால் விவசாயம் நல்லபடி முன்னேறும். அரியப்பம்பாளையம் கிராம மக்கள் நான்கு ஆண்டுகளாக விண்ணப் பித்துக் கொண்டும் எந்தவிதமான விமோசனமும் ஏற்படவில்லை. சில நாட்களுக்கு முன்னர் வந்து அளந்து அக்ரிமெண்ட் வாங்கிச் சென்றார்கள். இன்னும் அங்கு கரெண்ட் வராமல் திண்டாடிக் கொண்டிருக்கிறார்கள். ஆகவே, அக்ரிமெண்ட் செய்து வந்திருக் கும் எஸ்டிமேட்டுகளை உடனடியாக செய்து முடிக்கவேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன். பின்னர், சிலயிடங்களில் இரண்டு கிராமங்களை இணைத்து அக்ரிமெண்ட் வாங்குகிறார்கள், லைட் போட, கிணறுகளுக்கு கனெக்ஷன் கொடுக்க என்று. ஒரு கிராமத் தில் உள்ளவர்கள் வசதி படைத்தவர்களாக இருக்கலாம், இன்னொரு கிராமத்தைச் சேர்ந்தவர்கள் வசதியற்றவர்களாக இருக்கலாம். அப்படியிருக்கும்போது, ஒரு கிராமத்தினர் லைட் போட, மோட்டார் வைக்க வசதியற்று இருக்கும்போது இன்னொரு கிராமத்தார் இதற்குத் தயாராக இருக்கும்போது இரண்டு கிராமத் தினரும் போட்டால்தான் கொடுப்போம் என்று சொல்வது சரி யல்ல. ஆகவே, ஒரு கிராமத்தார் பணம் செலவு செய்து தயாராக இருக்கும்போது மற்ற கிராமத்தைச் சேர்ந்தவர்கள் அப்படிச் செய்யவில்லை என்பதால் உங்களுக்கும் கரெண்ட் இல்லை என்று சொல்வது வருந்தத்தக்கது. செய்தவர்களுக்கு உடனடி கொடுக்க ஏற்பாடு செய்யவேண்டுமென்று கேட்டுக் கொண்டு எனது சிறிய உரையை முடித்துக் கொள்கிறேன்.

* **SRI P. V. SRIRAMULU:** கனம் உதவி சபாநாயகர் அவர் களே, இப்பொழுது தமிழ்நாடு மின்சார சபையின் நிதி நிலை அறிக்கை கொடுக்கப்பட்டிருக்கிறது. இம்மாமன்றத்தில் கவர்னர் பெருமான் அவர்கள் ஆற்றிய உரையில் மின்சாரத்திற்கு முக்கிய இடம் கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்த வரவு செலவுக் கணக்கைப் பார்க்கும்போது இதில் சில குறைபாடுகள் இருக்கத்தான் செய்கிறது. ஆயிரத்து எண்ணூறு கிராமங்களுக்கு மின்சாரம் கொடுக்கப்பட்டுள்ளதாக இந்த மின்சார சபை நிதி நிலை அறிக்கையில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஆனால் நேற்று அங்கத் தினர்களுக்கு கொடுக்கப்பட்ட பத்தாண்டு சாதனைகள் என்ற புத்தகத்தைப் பார்க்கும்போது, ஜில்லாவாரியாக நோக்குங்கால் ஒவ்வொரு ஜில்லாவிலும் எத்தனை கிராமங்களுக்கு மின்சாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது என்று பார்க்கப் போனால் பத்தாண்டு களுக்கு முன்னால் மொத்தத்தில் 1,613 கிராமங்களுக்கு கொடுத்திருப்பதாக தெரிகிறது. அடுத்த 10 ஆண்டுகளுக்குப் பின்னர் மதுரை மாவட்டத்தில் 376, தென் ஆற்காடு

மாவட்டத்தில் 143, சேலம் மாவட்டத்தில் 1,048, திருச்சி மாவட்டத்தில் 782, ராமநாதபுரம் மாவட்டத்தில் 735, திருநெல்வேலி மாவட்டத்தில் 688 கிராமங்களுக்கு என்றிருக்கிறது. ஆனால் பாவம் தஞ்சை மாவட்டத்தைப் பார்க்கும்போது ஒன்றுமேயில்லை. இதில் மின்சாரத்தைப்பற்றி ஒரு வார்த்தை கூட குறிப்பிட வில்லை. அதற்காக நான் வருந்துகிறேன். ஏனென்றால், தஞ்சை மாவட்டம் மிகவும் பிற்போக்கானது என்று ஒதுக்கிவிட்டார்கள் என்று நினைக்கிறேன். எங்கள் நண்பர் கனம் மு. கருணாநிதி அவர்கள் அந்த மாவட்டத்திலிருந்து வந்திருப்பதினால்தான் இப்படி ஒதுக்கப்பட்டிருக்கிறதோ என்று எண்ணுகிறேன். வட ஆற்காடு மாவட்டத்தில் 1,248 கிராமங்கள் என்று இருக்கின்றன, செங்கற்பட்டு மாவட்டத்தில் 648 கிராமங்கள் என்று இருக்கின்றன. இவற்றையெல்லாம் சேர்த்துப் பார்த்தால் 7,280 கிராமங்கள் என்று இருக்கின்றன. இது தவிர இந்த "பத்து ஆண்டு சாதனைகள்" என்று கொடுக்கப்பட்டிருக்கும் புத்தகத்தில் பார்த்தால், கோவை, கன்னியாகுமரி, நீலகிரி இந்த மூன்றையும் விட்டுவிட்டுப் பார்த்தால் 5,358 என்றிருக்கிறது. ஆனால் இன்று கொடுக்கப்பட்டிருக்கும் கணக்கில் 12,636 கிராமங்களுக்கு மின்சாரம் கொடுக்கப்பட்டிருப்பதாகச் சொல்லுகிறார்கள். இதில் எது உண்மை என்று தெரியவில்லை.

11-30 உ.ப.

THE HON. SRI R. VENKATARAMAN: கனம் அங்கத்தினர்களுக்கு கொடுக்கப்பட்டிருக்கும் புத்தகத்திலுள்ள விவரங்கள் சுமார் ஆறு மாதங்களுக்கு முன்புள்ளவை. நான் குறிப்பிட்டது மார்ச் மாதம் 30-ம் தேதி வரை கணக்கெடுத்த புள்ளிவிவரம் என்பதை கனம் அங்கத்தினர் அவர்களுக்கு தெரிவித்துக் கொள்கிறேன்.

SRI P. V. SRIRAMULU: இது போல் புள்ளிவிவரங்கள் இப்போது எங்களுக்கு கொடுக்கப்பட்டிருக்கின்ற காரணத்தால்தான் இதைக் குறிப்பிட்டேனே தவிர வேறு ஒன்றுமில்லை. இரண்டாவது, விவசாய பம்புசெட்டுகளுக்கு மின்சாரம் கொடுப்பதில், 22 ஆயிரம் பம்பு செட்டுகளுக்கு கொடுப்பது என்று திட்டமிட்டிருக்கிறார்கள். அதன்படி 22 ஆயிரம் பம்பு செட்டுகளுக்கு கொடுத்தது உண்மைதான். இருந்தாலும் ஒவ்வொரு மாவட்டத்திலும் பார்க்கும் போது, ஒவ்வொரு பம்பு செட்டுக்கும் உதவிப்பணம் வாங்குகிறார்கள் என்றால், ஒவ்வொரு மாவட்டத்திற்கும் இது வித்தியாசப்படுகிறது. சேலம் மாவட்டத்தைப் பார்க்கும்போது உதவிப்பணம் ஒரு குதிரை ஓட்டத்திற்கு 50 ரூபாய் என்று நிர்ணயித்திருக்கிறார்கள். தென்னாற்காடு மாவட்டத்தில் 35 ரூபாய் என்று கூறியிருக்கிறார்கள். இப்படி மாவட்டத்திற்கு மாவட்டம் வித்தியாசம் இருப்பதைப் பார்க்கும் போது, 50 ரூபாய் வீதம் கணக்கிட்டுப் பார்த்தால் ஒரு விவசாயி ஐந்து குதிரை ஓட்டம் உள்ள பம்பு செட்டை வைத்துக்கொண்டு வேலை செய்தால், சுமார் 250 ரூபாய் கட்டவேண்டியிருக்கிறது. ஆனால் ஒவ்வொரு ஆண்டிலும் மின்சார சப்ளையைப் பொறுத்த வரையில் க்ரூப்பிங் சிஸ்டம் வைத்துவிடுகிறார்கள். மணிக்கணக்கில் தான் மின்சாரம் கொடுக்க

5th May 1962] [Sri P. V. Sriramulu]

முடியும் என்று நிர்ணயித்து விடுகிருர்கள். இதன் அடிப்படையில் பார்த்தால் 250 ரூபாய் வருவதில்லே. இதன் காரணமாக விவசாயிகளுக்கு நஷ்டம் ஏற்படுகிறது. இதில் அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறது என்று தெரியவில்லே. அப்படி நஷ்டம் ஏற்பட்டிருக்கிற இடங்களில் தொகையை திருப்பிக் கொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

இரண்டாவதாக, எந்தத் தொழிலுக்கும் மின்சாரம் கொடுப்பதற்கு மறுப்பது இல்லே என்று சொல்லியிருக்கிருர்கள். உண்மையில் இந்த மாநிலத்தில் 75 குதிரை ஓட்டத்திற்கு மேல் வைத்திருக்கக்கூடிய தொழில்களுக்கு போதுமான அளவு மின்சாரம் கிடைப்பதில்லே. 75 குதிரை ஓட்டமுள்ள தொழிலே வைத்துக் கொண்டிருக்கிற ஒரு சிறிய முதலாளியை எடுத்துக்கொண்டால், 100 குதிரை ஓட்டத்திற்கு மேல் வைத்துக்கொள்ளவேண்டும் என்று சொல்லியிருந்த போதிலும் 75 குதிரை ஓட்டத்திற்கு மேல் மின்சாரம் கொடுப்பதில்லே என்று காரணம் காட்டி, மீதியுள்ள மின்சாரத்திற்கு எல்.டி. லேன் எடுத்துக்கொள்ள வேண்டும் என்று சொல்லிவிடுகிருர்கள். சாதாரணமாக ஒரு சிறிய முதலாளி எல்.டி. லேன் எடுக்கவேண்டுமென்ருல் 12 ஆயிரம் ரூபாய் செலவாகிறது. இந்த 12 ஆயிரம் ரூபாயையும் எல்.டி. லேன் போடுவதில் கொட்டிவிட்டால், தன்னுடைய தொழில் ஸ்தாபனத்திற்கு வேண்டிய மூலதனத்தில் கம்மி ஏற்பட்டுவிடுகிறது. இதைப் பற்றியும் அரசாங்கம் ஆலோசனே செய்து பார்க்கவேண்டும். இது தவிர (ஆல்டர் மேன் சுவிட்ச்) என்று வைத்திருக்கிருர்கள். 12 மணி நேரத்திற்கு மட்டும் ஒரு மோட்டாரை ஓட்டிவிட்டு, பின்னுல் இன்னெரு மோட்டாரை ஓட்டவேண்டுமென்ருல் இந்த (ஆல்டர் மேன் சுவிட்ச்) உபயோகிக்கலாம் என்று இருக்கிறது. இந்த வசதிகளே யெல்லாம் சிறிய தொழில் நடத்துகிறவர்களுக்கு செய்து கொடுக்கவேண்டுமென்று தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன். மின்சாரத்தை எல்லாம் சேர்த்து, தென் மண்டலம் என்று வைத்துக்கொள்ளலாம் என்று குறிப்பிட்டிருக்கிருர்கள். வாஸ்தவத்தில் தென் மண்டலம் என்று சொல்லும்போது மிகவும் பயமாக இருக்கிறது. மத்திய அரசாங்கம் சென்ற 57-ம் ஆண்டில் இந்த மாதிரியான போர்ட் நிறுவப்பட வேண்டும் என்று சொன்னதின் பேரில் இந்த போர்ட் நிறுவப்பட்டது. இந்த போர்டானது தென் மண்டலம் என்று அமைக்கப்படவேண்டும், கேரளா, ஆந்திரா, கர்நாடகம், தமிழ்நாடு என்ற நான்கு ராஜ்யங்களேயும் ஒன்றுகச் சேர்த்து ஒரு மண்டலமாக வகுத்தால் நன்ருக இருக்கும் என்று குறிப்பிட்டார்கள். எங்களேப் பொறுத்தவரையில் திராவிட முன்னேற்றக் கழகத்தினர் வரவேற்கக்கூடிய செய்தி தான், ஆனுல் யானே வரும் பின்னே மணி ஓசை வரும் முன்னே என்று சொல்வதுபோல், தென்மண்டலம் என்று ஏற்படுத்திவிட்டு, கடைசியில் மத்திய அரசாங்கத்தின் கையில் ஒப்படைத்துவிடக் கூடாது என்று தான் நாங்கள் கேட்டுக்கொள்கிருேம். ஏனென்ருல் இந்த போர்டானது, இப்போது ரயில்வே தென்மண்டலமாக மத்திய அரசாங்கத்தின் கையில் இருப்பது போன்ருே, அல்லது

உணவு மண்டலம் என்று கூடி நான்காகவும் சேர்ந்து மத்திய அரசாங்கத்தின்கீழ் இருப்பது போன்றே ஆகிவிடக்கூடாது என்று கேட்டுக் கொள்கிறேன். நம் கையில் இருப்பதை எல்லாம் சேர்த்து மத்திய அரசாங்கத்தினிடம் கொடுத்துவிட்டு, பின்னால், அவர்களிடம் நாம் உதவி கேட்கின்ற நிலையில் இருக்கக்கூடாது என்று கேட்டுக்கொள்கிறேன்.

இன்னும் சில நண்பர்கள், இதில் வரியை உயர்த்த வேண்டும் என்றும், அப்போது தான் திறம்பட செயல்பட முடியும் என்றும் தெரிவித்தார்கள். உண்மையில் ஒன்றிரண்டு ஆண்டுகளுக்கு முன்பு இந்த மின்சாரமானது ஒரு சிறிய தொழிலுக்கு மின்சாரம் கொடுக்கும்போது, 1,000 யூனிட்டுக்கு 7 பைசா வீதமும், 1,000-லிருந்து 3,000 யூனிட் வரை 6 பைசா வீதமும், 3,000-க்கு மேல் இன்னும் குறைவாகவும் கட்டணத்தை நிர்ணயித்திருந்தார்கள். ஆனால் இப்போதுள்ள திட்டப்படி பார்த்தால் பத்து ந.பை. என்று நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. அந்த முறையில் கணக்கிட்டால் முன்னால் 500 யூனிட்டுகளுக்கு கொடுத்திருந்தது, இப்போது 200 யூனிட்டுகளுக்கு கொடுக்கவேண்டிய நிலை ஏற்படுகிறது. இப்படி எத்தனையோ மடங்கு அதிகமாக கொடுத்தும் மின்சாரம் போதிய அளவு அவர்களுக்கு சப்ளை இல்லை. எங்கள் பகுதியை எடுத்துக் கொண்டால், சிங்காரப்பேட்டையிலிருந்து வரக்கூடிய மின்சார சப்ளை ஏழெட்டு தடவை அவிந்து போய்விடுகிறது. இதைப்பற்றி டிஸ்டிரிக்ட் கவுன்சில் கூட்டத்தில் சம்பந்தப்பட்ட அதிகாரியிடத்தில் கேட்டதற்கு, இதைச் சரி செய்வதற்கு இன்னும் ஆறு மாதங்கள் ஆகும் என்று சொல்லிவிட்டார். இப்படி இருக்கும்போது அதே பகுதியில் பம்புசெட்டுகளை இரவு பகல் என்று ஓட்டலாம் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. கிருஷ்ணகிரி வட்டத்தை எடுத்துக் கொண்டால், இரவு பகல் என்று மின்சாரத்தை உபயோகித்துக் கொள்ளலாம் என்று இருந்தாலும், போதுமான அளவுக்கு மின்சாரம் கிடைப்பதற்கு வேண்டிய கே.வி. லைன் இல்லை என்று சொல்லப்படுகிறது. இதன் காரணமாக ஒழுங்காக மின்சார சப்ளை கிடைப்பதில்லை. இம்மாதிரிப்பட்ட பல குறைகள் அங்கு இருக்கின்றன. இவற்றை எல்லாம் நல்ல முறையில் ஆவன செய்யுமாறு கேட்டுக்கொள்கிறேன்.

* **SRI R. RAJAGOPALASWAMY NAICKER**: கனம் துணைச் சபாநாயகர் அவர்களே, கனம் அமைச்சர் அவர்கள் இந்தச் சபையிலே சமர்ப்பித்துள்ள மின்சார சபையின் நிதி நிலை அறிக்கையை நான் வரவேற்கிறேன். கனம் அமைச்சர் அவர்கள் தன்னுடைய அறிக்கையிலே சென்ற இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களில் செய்துள்ள சேவைகளைப் பற்றியும், நிறைவேற்றியுள்ள திட்டங்களைப் பற்றியும், மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் நிறைவேற்றப்போகின்ற திட்டங்களைப் பற்றியும் நல்ல முறையில் எடுத்துக் கூறியிருக்கிறார். அது மட்டுமல்லாமல், தமிழ்நாட்டில் அணு மின்சார நிலையம் ஏற்படுத்தபோவதாகச் சொல்லியிருக்கிறார். இன்னும் ஹொகேனக்கல்லில் மின்சார நிலையம் ஏற்படுத்த ஆவன

5th May 1962] [Sri R. Rajagopalaswamy Naicker]

செய்து கொண்டிருப்பதாகவும் சொன்னார்கள். இந்த சமயத்திலே கனம் அமைச்சர் அவர்களுடைய கவனத்திற்கு ஒன்றை மட்டும் கொண்டுவர விரும்புகிறேன். அதாவது எங்கள் உடுமலைப் பகுதியில் 20 வருஷ காலமாக பாம்பாறுத் ஜலமின்சாரத் திட்டம் பரிசீலனையில் இருந்து வருகிறது. ஆனால் நாளது வரையில் ஒன்றும் செய்யப்படவில்லை. அதைப் பற்றி நன்றாகப் பரிசீலனை செய்து நிறைவேற்ற ஆவன செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

அது மட்டுமல்லாமல், கனம் அமைச்சர் அவர்கள் தன்னுடைய உரையில் குறைந்தபட்ச கட்டணத்தை குறைக்கப் போவதாகச் சொன்னார்கள். இப்போது ஒரு குதிரை வேகத்திற்கு 50 ரூபாய் ஸ்பெஷல் காரண்டி வசூலிக்கிறார்கள். அதை குறைக்கப் போவதாகச் சொல்லுவது விவசாயிகளுக்கு மிகவும் வரவேற்கத் தக்கதாக இருக்கும். ஏனென்றால் இப்போது கிணற்றில் தண்ணீர் இருந்தாலும் இல்லாவிட்டாலும் கரண்ட் சப்ளை எடுத்துக்கொண்டவர்கள் அந்த ரூபாயைக் கட்டிவிடவேண்டுமென்று இருக்கிறது. அதைக் குறைக்கவேண்டியது மிகவும் அவசியம். கூடுமான வரையில் அதை 25 ரூபாயாகக் குறைக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக, அமைச்சர் அவர்கள் சொல்லும்போது இந்த வருஷம் கரண்ட் கட் இல்லை என்று சொன்னார்கள். வாஸ்தவம் தான். ஆனால், விவசாயிகளைப் பொறுத்த மட்டில் 10 ஆண்டுகளாக கரண்ட் கட் இருந்துகொண்டிருக்கிறது. காரணம் என்னவென்றால், விவசாயிகளுக்கு பகலிலே 6 மணி தான் மின்சாரம் கிடைக்கிறது. நான் அரசாங்கத்தின் மீது குறையாகச் சொல்லவில்லை. விவசாயிகளுக்கு இருக்கக்கூடிய குறையை அமைச்சரிடம் சொல்லி பரிகாரம் தேடிக்கொள்வதற்காகத் தான் சொல்லுகிறேன். பகலிலே 6 மணி நேரம் கரண்ட் சப்ளை கிடைக்கிறது, இரவிலே 8 மணிநேரம் கிடைக்கிறது. இராத்திரியில் விவசாயிகள் எப்படி தோட்ட பூமிகளில் தண்ணீர் பாய்ச்ச முடியும் என்று தெரியவில்லை. நடவு நடுவது எப்படியும் பகலில் தான் நடவேண்டும். சோளப் பயிர், புகையிலை, மிளகாய் இவைகளுக்கு இரவில் தண்ணீர் பாய்ச்சுவது கஷ்டம். ஆகவே அவசியமாக விவசாயிகளைப் பொறுத்த வரையில் வேண்டிய மின்சாரத்தை பகலிலேயே கொடுக்க ஆவன செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொண்டு எனக்குப் பேசுவதற்குச் சந்தர்ப்பம் அளித்த துணைச் சபாநாயகருக்கு எனது நன்றியைத் தெரிவித்துக்கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

* SRIMATHI RAJATHI KUNCHITHAPATHAM : தலைவர் அவர்களே, மின்சார அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கும் இந்த தமிழ்நாடு மின்சார சபையின் 1962-63-ம் ஆண்டுக்கான நிதி நிலை அறிக்கையை வரவேற்று அதில் சில முக்கிய அம்சங்களைப் பாராட்டிப் பேச விரும்புகிறேன்.

[Srimathi Rajathi Kunchithapatham] [5th May 1962

முக்கியமாக தமிழ்நாட்டை எடுத்துக்கொண்டோமானால், நாம் மின் வேகத்தில் கடந்த 10 ஆண்டுகளாக முன்னேறி வருகிறோம் என்று குறிப்பிட விரும்புகிறேன். 10-12 ஆண்டுகளுடைய முன்னேற்றத்தால் இன்று நாம் மின்சார யுகத்தில் வாழுகின்ற பெருமையைப் பெற்றோம். இது இன்னும் அணு யுகமாக நம் தமிழ்நாட்டில் முன்னேற்றம் அடைவதற்கு ஆக்ககரமாகத் தகுதி, வாய்ப்பு இருக்கிறது என்று குறிப்பிட்டிருப்பதையும் நான் வரவேற்கிறேன். முக்கியமாக அணுசக்தி மின்சாரம் தமிழ்நாட்டுக்கு இனிமேல் இன்றியமையாதது. நீர் வீழ்ச்சியினால் எவ்வளவு மின்சாரம் உற்பத்தி செய்ய முடியுமோ அத்தனையையும் உற்பத்தி செய்து விட்டோம். 10-12 வருஷ முன்னேற்றத்தில் 50,000-ஆக இருந்த நிலை 5,71,000-ஆக முன்னேற்றம் அடைந்திருக்கிறது. இதை மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட இறுதியில் ஏறத்தாழ 15,00,000 அளவுக்கு உயர்த்திக் காட்ட அவசியம் இருக்கிறது. அதில் நாம் ஏறத்தாழ 9,00,000 அளவுக்கு உயர்த்த முடியும். ஆகவே 6½ லட்சம் அளவுக்குத் துண்டு விழுகிறது, ஆகவே காவிரி ஆற்றில் ஹொகேனக்கல் என்ற இடத்தில் 58 கோடி ரூபாய் செலவில் இரு அணைகள் கட்டி அதன் மூலம் 8 லட்சம் அளவுக்கு மின்சாரம் நமக்கு கிடைக்கவிருக்கிறது என்று குறிப்பிட்டிருப்பது நமக்கு ஆறுதல் அளிக்கக் கூடியதாக இருக்கிறது. அணு சக்தி மின்சாரம் தமிழ்நாட்டுக்கு வருவதற்கு அமைச்சர் அவர்கள் கட்டாயம் அவர்களுடைய முழுத் திறமையையும் காட்டி நமக்கு அதைப் பெற்றுத் தருவார்கள் என்ற நம்பிக்கை இருக்கிறது. தொழிலமைச்சராக இருக்கிற கனம் வெங்கட்ராமன் அவர்களே மின்சார அமைச்சராகவும் அமைந்திருப்பது மிகவும் பொருத்தமாக இருக்கிறது. நம் நாடு முன்னேற வேண்டும், அதுவும் தொழில் துறையில் இன்னும் வேகத்தோடு முன்னேறவேண்டுமானால் தொழில் அமைச்சர் கையிலேயே மின்சாரத்தையும் விட்டிருப்பது நல்ல வாய்ப்பையும் வசதியையும் அளிக்கும். காரணம், எங்கள் திருநெல்வேலியில் பாபநாசம் அணைக்கட்டிலிருந்து விவசாயத்திற்குத் தண்ணீர் வேண்டுமென்ற இக்கட்டான நிலைமை வரும்போது பொது மராமத்து துறை அமைச்சராக இருந்த கனம் கக்கன் அவர்களிடம் வேண்டிய உத்திரவை வாங்கிக்கொள்வோம். அதே சமயத்தில் இன்னொரு அமைச்சரிடமிருந்து மின்சாரத்திற்கு உத்திரவு வாங்க வேண்டியிருந்தது. அப்போது கனம் ராமையா சென்னையில் இருப்பார்கள். இப்படி இரண்டு மந்திரிகளுடைய கையெழுத்தும் இருந்தால்தான் தண்ணீர் இல்லாது வாடுகின்ற பயிர்களுக்குத் தண்ணீர் கொண்டுபோக முடியும். அந்த முறையில் இல்லாமல் தொழில் துறை யார் கையில் இருக்கிறதோ அவர்கள் கையிலேயே மின்சாரமும் இருப்பது வரவேற்கத் தக்கது. இந்த முக்கியத்துவத்தை அறிந்துதானோ என்னவோ நம் அமைச்சர் அவர்கள் மின்சார இலாகாவையும் எடுத்துக் கொண்டார்கள் என்று நினைக்கிறேன். தமிழ்நாட்டுக்கு அணு மின்சார நிலையத்தைக் கட்டாயம் கொண்டுவருவார் என்று நம்பிக்கையோடு எதிர்பார்த்திருக்கலாம்.

[5th May 1962 [Srimathi Rajathi Kunchithapatham]

அடுத்தபடியாக, மின்சாரம் மிகவும் நல்ல முறையிலே நாட்டிலே மின் வேகத்தில் முன்னேறி வந்திருக்கிறது. ஆண்டுக்கு 1,200 கிராமங்களுக்கு மின்சாரம் கொடுக்கவேண்டுமென்று குறிக்கோள் வைத்திருந்தது. 1,800 கிராமங்களுக்கும், அதேபோன்று 15,000 பம்புசெட்டுகளுக்கு மின்சாரம் கொடுக்கவேண்டுமென்று எண்ணியது. 22,000 பம்புசெட்டுகளுக்கு கொடுக்கும் நிலையில் முன்னேறினால், அதைப் பாராட்டத் தான் வேண்டும். நாம் இப்படி சாதனைகளை எடுத்துச் சொல்லும்போது ஒன்றிரண்டு வேதனைக் குரல் எழும்பத்தான் செய்கின்றன. எதிர்க் கட்சியில் இருக்கிறவர்கள் இந்த மாதிரி பேசவேண்டும் என்று சம்பிரதாயத்துக்காகப் பேசுகிறார்கள் என்று எண்ணுகிறேன். காரணம் எதிர்க் கட்சி அங்கத்தினர் ஒருவர் பேசும்போது மேல்நாடுகளில் எல்லாம், கனடா, ஸ்வீடன் போன்ற தேசங்களில் 3,000 அல்லது 4,000 யூனிட் என்று ஒவ்வொருவரும் மின்சாரத்தைப் பயன்படுத்தும் வாய்ப்பு இருக்கும்போது, இங்கே 6 யூனிட்டிலிருந்து 62-க்குத் தானே வந்திருக்கிறது என்று குறிப்பிட்டார்கள். 6-லிருந்து 62-க்கு 10-12 ஆண்டுகாலத்தில் வந்திருக்கிறோம் என்றால் அது முன்னேற்றத்தின் வேகத்தைத் தான் காட்டுகிறது என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். மேல் நாடுகளில் 3,000 யூனிட் அல்லது 1,500 யூனிட் இருக்கிறது என்றால், அது 100 ஆண்டுகால முன்னேற்றத்தினால் ஏற்பட்டது. நம் முன்னேற்றம் 10-12 ஆண்டு கால முன்னேற்றம். அந்த வகையில் எதிர்க்கட்சிக்காரர்களாக இருந்தாலும் நம் முன்னேற்றத்தைப் பாராட்டாமல் இருக்க முடியாது. கனம் அங்கத்தினர் கருணாநிதி அவர்கள் தஞ்சையிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பதாலோ என்னவோ தஞ்சை புறக்கணிக்கப்பட்டு விட்டது, கிராமங்களின் எண்ணிக்கைகூட குறிப்பிடப்படவில்லை என்று எதிர்க்கட்சி அங்கத்தினர் ஒருவர் சொன்னார்கள். எதிர்க்கட்சி உப தலைவர் சென்ற சட்ட சபையில் திருச்சி ஜில்லாவைச் சேர்ந்த ஒரு தொகுதியின் அங்கத்தினராக இருந்தார். திருச்சியிலே இருக்கும் கிராமங்களின் எண்ணிக்கை கொடுக்கப்பட்டிருக்கிறது என்று அந்த அங்கத்தினருக்கு குறிப்பிட விரும்புகிறேன். எதிர்க்கட்சியைச் சேர்ந்தவர்களாக இருக்கிற காரணத்தினால் அவர்கள் தொகுதி புறக்கணிக்கப்படுகிறது என்று சொல்லுவது தவறு; ஏனென்றால் அவர் இப்போது தான் தஞ்சை தொகுதியின் அங்கத்தினராக இருக்கிறார். அண்மையில் இருக்கக்கூடிய ராஜ்யங்களில், ஒரு சொட்டுத் தண்ணீர்கூட கொடுக்க முடியாது என்று அமைச்சர்களுடைய மன நிலை இருக்கும்போது, விறகு வெட்ட வந்தால் கையை வெட்டி விடுவோம் என்று சொல்லும்போது, நான்கு ராஜ்யங்களும் இதில் சேரவேண்டும்; அங்கு இருக்கும் நீரைப் பயன்படுத்திக்கொள்ளவேண்டும் என்று அழகாகச் சொல்லி விடலாம்; எல்லோருக்கும் வாய்ச்சொல் எளிது, சுமக்கிறவனுக்குத் தான் தலைச்சுமை தெரியும் என்பதுபோல, நான்கு ராஜ்யங்களிலிருந்தும் பெற வேண்டியதைப் பெறுவதற்கு நல்ல சாதுரியம் மிகவும் தேவை. ஸோனல் கவுன்ஸிலில் சிரத்தை எடுத்து அமைச்சர் அவர்கள் மிகவும் சாமர்த்தியமாகச் செய்வார். அவர்

களுக்கு அதிகாரிகளும் பக்கபலமாக இருக்கிறார்கள். எங்கு பார்த்தாலும், எந்த மாவட்டத்தை எடுத்துப் பார்த்தாலும் என்னென்ன கிராமங்களுக்கு மின்சாரம் இல்லை என்று எடுத்துக் கூறியவுடன், அதிகாரிகள் நல்ல முறையில் செயல்படுகிறார்கள் என்று பெருமையுடன் இந்தச் சமயத்தில் கூறிக்கொள்ள ஆசைப் படுகிறேன். ஆனால், திருநெல்வேலியில் ஒரு கம்பெனியின் தொந்தரவு இருக்கிறது என்பதை இந்தச் சமயத்தில் நான் குறிப்பிட விரும்புகிறேன். திருநெல்வேலி, தூத்துக் குடி ஆகிய இடங்களில் மின்சார சப்ளை கம்பெனி வைத்து நடத்துகிறார்கள். இது திருநெல்வேலிக்கும் மற்ற ஜில்லாக்களில் உள்ளதைப் போன்ற ஒரு சாபக்கேடு என் பதை நான் தாழ்மையோடு கூறிக்கொள்ள விரும்புகிறேன். காரணம், இன்று அவர்கள் போட்டிருக்கின்ற மீட்டர், டிரான்ஸ் பார்மர் லயின் ஆகியவைகள் எல்லாம் போட்டு 10, 20 ஆண்டுகள் ஆகி, மிகவும் வயதடைந்த நிலைமையிலே இருப்பதால் வானத்திலே இருள் சூழ்ந்தால், வீடுகளிலேயும் இருள் சூழ்ந்து விடுமோ என்று அஞ்சி வாழக் கூடிய நிலைமையில் இருக்கிறோம். சிறிது மழை வந்து விடுமென்று எண்ணினால்கூட, உடனே நாங்கள் அரிக்கன் விளக்கு, குத்து விளக்கு, கை விளக்கு ஆகியவைகளைத் தேடி ஏற்றி வைத்துக் கொள்ளக்கூடிய நிலையில் அவஸ்தைப்பட்டுக்கொண் டிருக்கிறோம். 25 லட்சம் ரூபாய் கொடுத்திருக்கிறோம் என்று கூறுகிறார்கள். இந்த 25 லட்சம் ரூபாய்கூட போதாது. இன்னும் சில கிராமங்களைப் பார்த்தோமானால், கிராமங்களிலே பிற்பட்ட சமுதாயம் என்று சொல்லக்கூடிய இடங்களிலே மின்சாரம் துரிதமாக கொண்டுவரப்படுகிறது. ஆனால் அடுத்த தெருவாக இருக்கக்கூடிய ஒரு கிராமத்திலே, அந்த தெருவுக்கும் மின்சாரம் கொடுக்கவேண்டுமென்று சொல்லும்போது, அது கம்பெனி லிமிட் அல்ல என்று சொல்லி விட்டு விடுகிறார்கள். அது அரசாங்கத்தின் பகுதியாக இருக்கின்ற காரணத்தினாலே ரொம்ப காலதாமதம் ஏற்படுகிறது. ஆகவே, இந்த கம்பெனிகளை அரசாங்கத்தில் எடுத்துக்கொண்டு நடத்த வேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கிறேன்.

விவசாயிகளுக்கு பம்ப் செட்டுகள் கொடுப்பதிலே நாம் மிகவும் முன்னேற்றமடைந்து இருக்கிறோம். 139,000 பம்பு செட்டுகளுக்கு நாம் மின்சார வசதி கொடுத்து, இதன் பலனை இன்று கிராமங் களிலே உள்ள விவசாயிகள் மிகவும் நல்ல பயன் அடைந்திருக் கிறார்கள். ஆனால் இதிலும் சில சிக்கல்கள் இருக்கின்றன என்பதையும் விவசாயிகள் படும் அவஸ்தையையும் கனம் ராமையா அவர்கள் திருநெல்வேலிக்கு முன்பு வந்தபோது நேரில் அவரிடம் எடுத்துக் கூறி இருக்கிறோம். கோர்ட்டுகளின் மூலம் கேஸ்கள் தாக்கல் செய்யப்பட்டு, அவர்கள் என்ன நிலைமையில் அவஸ்தைப் படுகிறார்கள் என்பதை யெல்லாம் சொல்லி இருக்கிறோம். இந்தச் சிக்கல்களை யெல்லாம் போக்க ஆவனசெய்வதாக அப்போதிருந்த அமைச்சர் அவர்கள் முயற்சிப்பதாக கூறினார்கள். அதையும் கவனிக்கும்படி கேட்டுக் கொள்கிறேன்.

5th May 1962] [Srimathi Rajathi Kunchithapatham]

இந்த மின்சார சபை சமர்ப்பிக்கிருக்கும் இந்த அறிக்கை மிகவும் நல்ல அம்சங்களுடன் அமைந்திருக்கிறது. மேலும் மேலும் முன்னேற்றமடைய இப்போதுள்ள அமைச்சர் அவர்கள் பாடு படுவார்கள் என்ற நம்பிக்கையும் நமக்கு இருக்கிறது. கோடை காலத்தில் மின்சாரத்திற்கு தட்டுப்பாடு ஏற்பட்டு விவசாயிகள் மிக வும் கஷ்டப்படக்கூடிய நிலைமையைப் போக்கி, இப்போது அந்த அளவுக்கு சங்கடம் ஏற்படாத நிலைமையை உண்டாக்கி இருக் கிறார்கள். மேலும், இதைச் செய்வதற்கு வானத்தை விவசாயிகள் பார்த்துக் கொண்டிராமல் இதைத் தவிர்ப்பதற்கு அணுசக்தி மின்சார நிலையம் நமக்கு வரவேண்டும். தமிழ்நாட்டிலே இருந்து பிற மாகாணங்களுக்கு கொடுக்கக்கூடிய இந்த நிலைமையை நம்முடைய நாட்டிலே கொண்டு வருவதற்கு அமைச்சர் அவர்கள் ஆவன செய்வார்கள். அதற்கான திறமையும், ஆற்றலும், அனுபவ மும் அவருக்கு இருப்பதால், அதை வைத்துக்கொண்டு நம் நாடு பயனடையும்படிச் செய்வார்கள் என்ற நம்பிக்கையோடு, என்னுடைய வார்த்தைகளை முடித்துக் கொள்கிறேன்.

SRI C. G. VISWANATHAN: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, மின்சார சபையின் 62-63 ஆண்டு நிதி நிலை அறிக்கை யின் மேல் என்னுடைய கருத்தைச் சொல்லலாம் என்று கருதுகிறேன். கனம் மந்திரி அவர்கள் மின்சார சக்தியானது தமிழ்நாட்டிலே நல்ல முறையிலே உற்பத்தி செய்கிறோம். அதன் மூலம் விவசாயிகள் அதிகமான அளவுக்கு மின்சார வசதி பெற்று வருகிறார்கள் என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். தமிழ்நாட்டிலே நல்லமுறையிலே மின்சார சக்தி உற்பத்தியானது தரமாக இருந்தாலும், விநியோகம் செய்யக்கூடிய முறையிலே சில சிக்கல்கள் இருப்பதாக நான் கருதுகிறேன். குறிப்பாக, விவசாயிகளுக்கு குறித்த காலத்திலே நல்ல மின்சக்தி வசதி கிடைக்காததுடன், கிராமங்களுக்கும் மின்சார வசதி அளிப்ப தில்லை. எனக்கு முன்பு பேசிய கனம் அங்கத்தினர்கள் எல்லாம் ஷிப்ட் முறையிலே மின்சாரம் விநியோகிக்கப் படுகிறது என்று குறிப்பிட்டார்கள். இதே நிலைமை தான் என்னுடைய தொகுதியிலும் இருந்து வருகிறது. குறிப்பாக, மின்சாரச் திறனை சு தகுந்த காலத்திலே அங்கு அளிக்கப்படாத காரணத்தினால், மின்சார மோட்டார்கள் எல்லாம் தீப்பற்றிக் கொள்கிற நிலைமை ஏற்படுகிறது. அதனால் விவசாயிகள் அடிக்கடி மின்சார மோட்டார்களை பழுது பார்க்கவேண்டிய நிலைமை என்னுடைய தொகுதியிலே இருந்துகொண்டு வருகிறது. குறிப்பாக, மின்சார மோட்டார்களுக்கு அளிக்கப்படுகின்ற மின் சக்தியானது குறைவாக இருக்கின்ற காரணத்தினாலும், அதே நோக்கிலே குறிப்பிட்ட அளவுக்கு மேல் அங்கு இருக்கிற டிரான்ஸ் பார்மர்கள் அந்த அளவுக்கு அதிகமாக மின்சாரத்தை அளிக்க முடியாத நிலைமையில் இருக்கின்ற காரணத்தினாலும், இரவு நேரங்களில் கிராமங்களிலும், நகரங்களிலும் மின்சாரம் உபயோகிக்கப்பட்டு வருவதால், இந்தவித தடை ஏற்பட்டு இந்த வித சிக்கல் ஏற்படுகிறது என்பதை நான் குறிப்பிட விரும்பு கிறேன். குறிப்பாக, பம்ப செட்டுகள் அமைப்பதற்கு மனுக்கள்

அதிகமாக போட்டிருக்கிறார்கள், கிராம மக்கள். அப்படி மனுக்கள் போட்டு இணைப்பதற்கான முயற்சிகள் செய்து கொண்டு வரும்போது, என்னுடைய தொகுதியிலே இந்த யூனிட்டானது செங்கல்பட்டிலிருந்து வேலூருக்கு மாற்றப்பட்டிருக்கின்ற காரணத்தினால், விவசாயிகள் இந்தப் பிரச்னைகளை அந்த இடத்திலே தீர்த்துக்கொள்ள முடியாமல் வெகு தூரத்திலுள்ள வேலூருக்குச் சென்று வரக்கூடிய நிலைமையில் இருக்கிறார்கள். எஸ்டிமேட் சாங்ஷனாகி வந்த பிறகும், இந்த பம்பு செட்டுகள் அமைக்க வேண்டுமென்று விண்ணப்பங்கள் மாகிறது. செங்கல்பட்டிலே நூற்றுக்கணக்கான பம்பு செட்டுகள் அமைக்க வேண்டுமென்று விண்ணப்பங்கள் வந்திருந்தும், மின்சார கம்பிகள் இல்லாத காரணத்தினால், அதற்கு வேண்டிய உபகரணங்கள் இல்லாததினால் ஏறக்குறைய நான்கைந்து மாத காலமாக காலதாமதமாகிக் கொண்டு வருகிறது. அங்கு பம்பு செட்டுகள் அமைப்பதற்கு, மின்சார கம்பிகள் இழுப்பதற்கு வழிவகைகள் செய்ய அங்குள்ள அதிகாரிகள் கருதுகிறார்கள். கடந்த இரண்டு வாரங்களுக்கு முன்புகூட, வேலூருக்கும், காஞ்சிபுரத்திற்கும் லாரிகள் அனுப்பப்பட்டு, அங்கு மின்சாரக்கம்பிகள் இல்லை என்று திரும்பி வந்து விட்டார்கள். அலை அவர்களுக்கு மின்சார கம்பிகள் இருக்கிறது வந்து எடுத்துக்கொள்ளுங்கள் என்று உத்திரவு மட்டும் வந்திருக்கிறது. ஆனால் கம்பிகள் இல்லையென்று லாரிகள் திரும்பி வந்திருக்கின்றன. இப்படி மின்சார இலாகாவிலே ஒரு உத்திரவும் அதே காலத்திலே அங்கே மின்சாரக் கம்பிகள் இல்லை என்று சொல்லக்கூடிய நிலைமையும் தான் ஏற்படுகிறது. ஆகவே, இங்குள்ள விவசாயிகளுக்கு உடனடியாக பம்பு செட்டுகளுக்கு மின்சாரம் வழங்குவதற்கான ஏற்பாடுகளை செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்து, நகரசபைகளுக்கு மின்சார சப்ளை செய்வதிலே பல இடைஞ்சல்கள் இருந்துகொண்டிருக்கின்றன. குறிப்பாக, மின்சார பல்புகள் இல்லாத ஒரு நிலைமை ஒவ்வொரு நகரசபையிலும் 2, 3 மாத காலமாக இருந்துவருகிறது. அதை மாற்றியமைக்க வேண்டுமென்று கோருகிறேன். அவர்களும் எழுதியிருக்கிறார்கள். மேலிடத்திலிருந்து பல்புகள் வந்தால் உடனடியாக மாற்றியமைப்போம் என்று கூறுகிறார்கள். இப்படி ஒவ்வொரு துறையிலும் காலதாமதமாகி வருகிறது. இந்த நிலைமைகளை யெல்லாம் மின்சார அமைச்சர் அவர்கள் ஓரளவுக்கு கவனித்து, நகரசபைகளுக்கு போதிய மின்சக்தி அளிப்பதுடன், நல்லமுறையிலே பராமரிக்கப்பட வேண்டுமென்றும் கேட்டுக்கொள்கிறேன்.

குறிப்பாக, இந்த அணு மின்சார நிலையத்தைப் பற்றி கனம் அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள். என்னுடைய தொகுதியை எடுத்துக்கொண்டால், அங்குள்ள கல்பாக்கம் கிராமத்தில் இந்த அணு மின்சார நிலையம் வைப்பதற்கான தகுதி இருப்பதாக எனக்குத் தகவல் வந்திருக்கிறது. இந்த இடத்திலே நல்ல தண்ணீர் வசதியும், சுற்றுப்புறங்களிலே நல்ல மண்வளமும் இருப்பதாக பத்திரிகை வாயிலாக அறிந்தேன். ஆகவே, கனம்

5th May 1962] [Sri C. G. Viswanathan]

அமைச்சர் அவர்கள் இந்த இடத்தை மேலும் சிபார்சு செய்து, அந்த இடத்திலே அணு மின்சார நிலையத்தை ஏற்படுத்துவதற்கு வழிவகைகள் செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். ஏனென்றால், செங்கல்பட்டு ஜில்லாவிலே எந்தவிதமான பெரிய தொழிற்சாலைகளும் இல்லை என்ற குறை இருந்து கொண்டு வருகிறது. ஆகவே, இந்த அணு மின்சார நிலையத்தை அவசியம் இங்கு ஏற்படுத்த கனம் அமைச்சர் அவர்கள் முயற்சி செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொண்டு, என்னுடைய உரையை முடித்துக் கொள்கிறேன். வணக்கம்.

**SRI V. ELLAMMA NAIDU :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இன்று நமது தொழில் அமைச்சர் அவர்கள் தமிழ்நாடு மின்சார சபையின் 1962-63-ம் வருஷத்திய நிதி நிலை அறிக்கையையும், 1961-62-ம் ஆண்டின் செலவினங்களையும் இங்கு சபையின் முன்பு சமர்ப்பிக்கப்பட்டதை ஆதரித்து பேசும் முறையிலே என்னுடைய கருத்துக்களைச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

தமிழ்நாட்டில் நமது மின்சார போர்டானது ஆரம்பிக்கப்பட்ட காலத்திற்கு முன்பு அரசாங்கத்தின் ஒரு பகுதியாக இருந்தது. அரசாங்கத்தின் ஒரு பகுதியாக இருந்து இப்போது இந்த போர்டாக மாற்றப்பட்ட பிறகு நல்ல முறையிலே அரசாங்கத்தில் வளர்ந்து வந்த நிலைமையை அப்படியே செம்மையாகத் திறம்பட நடத்தி வருகிறதை நாம் பாராட்டத்தான் வேண்டும். கோவை ஜில்லாவின் வாசி என்ற முறையிலே என்னுடைய கருத்துக்கள் ஒன்றிரண்டைச் சொல்லிக்கொள்ளுகிறேன். விவசாயத்திற்குக் கொடுக்கப்படும் மின்சாரத்திற்கு குறைந்த பட்சக் கட்டணம் ரூ. 50 என்று வைக்கப்பட்டிருக்கிறது. இது அதிகம் என்று நான் கருதுகிறேன். கிணறுகளில் தண்ணீர் இருந்தாலும், இல்லாவிட்டாலும், நாம் ஆண்டு ஒன்றுக்கு ரூ. 50 விவசாயிகளிடமிருந்து பெற்றுவிடுகிறோம். இது எல்லா விவசாயிகளுக்கும் பொருந்தும் முறையிலே இருக்கவேண்டும் என்பது என்னுடைய அவா. இயற்கையான செல்வங்கள் நாட்டிலே எங்கு இருப்பினும், அது எல்லா மக்களுக்கும் நல்ல முறையில் விநியோகிக்கப்பட வேண்டும் என்ற நோக்கத்தோடு இதைச் சொல்லுகிறேன். அணைக்கட்டுகள், வாய்க்கால்கள், பாசன வசதிகள் இவைகளிலிருந்து நீர் பாய்ச்சும் விவசாயிகளிடமிருந்து இரண்டு போகம் விளையும் நீர்ப்பாசன திட்டமாக இருந்தாலும் சராசரியாக ஒருவரிடமிருந்து ரூ. 20-லிருந்து ரூ. 30 வரை ஆண்டு ஒன்றுக்கு வரி வசூலிக்கிறோம். ஆனால், அதே நிலையிலே மின்சாரத்தின் மூலம் தண்ணீர் பாய்ச்சும் விவசாயிகளிடமிருந்து ஆண்டு ஒன்றுக்கு குறைந்த பட்ச கட்டணமாக ரூ. 50-ம், அதற்கு மேல் பாய்ச்சினால் 60, 70, 100 என்று கோவை ஜில்லாவில் வசூலிக்கப்படுகிறது. இம்மாதிரி விவசாயிகளுக்குள் ஏற்றத்தாழ்வு இருக்கிறது. வருடம் ஒன்றுக்கு ஒரு ஏக்கருக்கு ரூ. 2,000 வருமானம் வரக்கூடிய தோப்புக்கள், நிலங்களுக்கு ரூ. 40, 50 வரி வசூல் செய்யப்படுகிறது. ரூ. 10,000 முதல் 25,000 வரையில்

[Sri V. Ellamma Naidu] [5th May 1962

சர்க்காரிடமும் மற்ற இடங்களிலும் கடன் பெற்று ரூ. 1,000, 3,000 செலவழித்து மின்சார இயந்திரங்களை வைத்து உபயோகித்து தண்ணீர் பாய்ச்சும் விவசாயிகளிடமிருந்து—ஒரு விவசாயி சராசரி 5 ஏக்கர் வைத்திருந்தால் அவர் 5 குதிரை பவர் மோட்டார்தான் வைத்து தண்ணீர் பாய்ச்ச வேண்டியிருக்கும்—ரூ. 250 குறைந்த பட்சமாக வசூலிக்கப்படுகிறது. இம் மாதிரி ஏற்றத்தாழ்வு விவசாயிகளிடையே காட்டப்படுகிறது. இதனால் தோப்புக்கள் மீதும் நஞ்சை நிலங்களின்மீதும் அதிகமாக வரி விதிக்கவேண்டுமென்று நான் சொல்லவில்லை. அது என்னுடைய நோக்கமும் அல்ல. சர்க்காரால் மின்சார போர்டுக்குக் கொடுக்கப்பட்டுள்ள நிதி நிலைக்கு 5¼ சத விகிதம் வட்டி என்று குறிப்பிட்டார்கள் அமைச்சர் அவர்கள். உண்மையாகப் பார்க்குமிடத்து, வியாபார கண்ணோட்டத்தோடு நமது மின்சார போர்டு இயங்கவேண்டாம் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். மக்களுடைய நலனுக்குத் தான் நாம் முதல் இடம் கொடுக்கவேண்டுமேதவிர, அதிகமான லாபத்தையோ அல்லது குறைந்த லாப நோக்கத்தோடு கண்கொண்டு பார்க்காமல், விவசாயிகளுக்கு குறைந்த பட்ச கட்டணம் வழங்க வேண்டும் என்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன். முன்பு பேசிய அங்கத்தினர் அவர்கள் சொல்லிய மாதிரி 10 ஆண்டுகளுக்கு 50 ரூபாய் என்று வைத்திருக்கிறோம், அதை 20 ஆண்டுகளாக மாற்றிக்கொண்டு, 50 ரூபாய் என்று இருப்பதை 25 ரூபாய் குறைந்தபட்ச கட்டணம் என்று வைத்தால் நலம். கிணறுகளில் தண்ணீர் இல்லாமல் இருந்தால்கூட ரூ. 50 வசூலித்துவிடுகிறார்கள். அல்லது அதிகமாக மின்சாரம் வேண்டிய விவசாயிகளுக்கு வேண்டிய அளவு மின்சாரம் கொடுப்பதும் இல்லை. யோசித்துப் பார்த்தால், ஒரு விவசாயி எவ்வளவு மின்சாரம் செலவு செய்திருக்கிறாரோ, அதற்குரிய கட்டணத்தை தான் வசூலிக்க வேண்டும். அதுதான் முறை. அத்தகைய முறையில், வசூலிப்பதற்கு ஆவன செய்யவேண்டுமென்று அமைச்சர் அவர்களையும், மின்சார போர்டையும் நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

12-00 noon.

கோவை ஜில்லாவைப் பொறுத்தவரை, கிணறுகள் மிக ஆழமானவை. தஞ்சை, திருச்சி மாவட்டம் போன்று, அங்கே மேல் நிலை கிணறுகள் அல்ல, 10 அடி, 20 அடி, 25 அடி ஆழத்தில் மின்சாரத்தின் மூலம் தண்ணீர் இறைப்பதற்கும், 100 அடி ஆழத்தில் மின்சாரம் வைத்து தண்ணீர் இறைப்பதற்கும் செலவு அதிகம் ஆகும். இவைகளையெல்லாம் யோசித்துப் பார்க்கவேண்டும் மின்சார போர்டும், அமைச்சர் அவர்களும். ஒரு இடத்தில் கட்டணம் ரூ. 50 ஆக இருக்கிறது. வட ஆற்காடு ஜில்லாவில் ரூ. 35 என்று கனம் அங்கத்தினர் அவர்கள் சொன்னார்கள். இந்தப் பாகுபாடுகளையெல்லாம் நீக்கிவிட்டு, எல்லா ஜில்லாக்களிலும் குறைந்தபட்சக் கட்டணம் ரூ. 50 என்பதை ரூ. 25-ஆக ஆக்கி மாற்றிக்கொண்டு, 10 ஆண்டு என்பதை 20 ஆண்டுகளாக மாற்றி அமைத்தால் கூட நலமாக இருக்கும் என்று கருதுகிறேன்.

இன்னொருபுறம் பாதிக்கப்பட்டவர்கள் மின்சார தொழிலாளர்கள். தற்காலிகமாக வைக்கப்பட்டவர்களை கோவை ஜில்லாவில் நிறுத்திவிட்டதாக என்னிடம் பலபேர் சொன்னார்கள்.

என்.எம்.ஆர். என்று வைக்கப்பட்டிருந்த டெம்பரரி தொழிலாளர்கள் நிறுத்தப்பட்டுவிட்டார்கள். அவர்களையும் வேலைக்கு எடுத்துக் கொள்ளுவதற்கு முயற்சி செய்தால் நலமாக இருக்கும்.

இன்னொரு புறத்தில், குறிப்பாக அதைச் சொல்லித் தான் ஆக வேண்டியிருக்கிறது. இதனால் பாதிக்கப்பட்ட மக்கள் ஹரிஜனங்கள். அவர்கள் நல்ல முறையில் விவசாயம் செய்வதற்கு அரசாங்க ஒத்துழைப்பு, மின்சார போர்டு உதவி, இவைகளைக் கொண்டு திருந்திய முறையில் சிக்கிரம் தண்ணீரை இறைத்து விவசாயம் செய்வதற்கு ஆரம்பித்த பிறகு, அவர்களுடைய ஒரே தொழிலாக இருந்த நீர் இறைக்க உபயோகப்பட்ட பறிதைக்கும் வேலையும் போய்விட்டது. ஒரே கிராமத்தில் கூட 20, 30, 100, குடிகள் இல்லாமல் இல்லை. அவர்களுக்கு உபயோகமாக ஏதாவது தொழில்களை அமைத்துக்கொடுக்கவேண்டும். ஏன் சொல்லு கிறேன் என்றால், தொழில் அமைச்சரும், மின்சார அமைச்சரும் ஒருவராக இருக்கிறார். ஆகவே, அவர்கள் ஹரிஜன மக்களுக்கு நல்ல முறையில், கூட்டுறவு முறையிலோ அல்லது வேறு முறையிலோ, தொழில்களை அமைத்துக்கொடுத்து, அவர்கள் வாழ்க்கையை நடத்த வசதி செய்து தரவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

நல்ல முறையில் பணியாற்றிவந்துள்ள மின்சார இலாகா அமைச்சர் முன்பு இருந்தவரையும் இப்போது வந்திருப்பவரையும் கூட, அதேபோல மின்சார போர்டையும் பாராட்டுகிறேன். மின்சார போர்டு அதனுடைய பணியாட்கள் மூலம் நல்ல முறையில் பணி செய்துகொண்டு வந்திருக்கிறது. அந்தப் பணியை தொடர்ந்து செய்து நல்ல முறையில் மக்களுக்கு பயனுள்ள வகையில் அது இயங்க வேண்டும் என்று நான் கேட்டுக் கொண்டு, இந்த நிதி நிலை அறிக்கையை ஆதரிக்கும் முகத்தான், நான் பேசுவதற்கு அனுமதி கொடுத்த தலைவர் அவர்களுக்கு என்னுடைய நன்றியறிதலை தெரிவித்துக்கொண்டு, என்னுடைய உரையை முடித்துக்கொள்ளுகிறேன். வணக்கம்.

* **SRIMATHI P. K. R. LAKSHMIKANTHAM:** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கனம் தொழில் அமைச்சர் அவர்களால் விவாதத்திற்கு வைக்கப்பட்டிருக்கிற தமிழ் நாடு மின்சார சபையின் 1962-63-ம் ஆண்டு நிதிநிலை அறிக்கையின்பேரில் நான் சில வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன். மின்சார சபையானது மிக மின்வேகத்திலே மின்சக்தியை உற்பத்தி செய்து தமிழ் நாட்டின் பெருமையை உயர்த்தியிருக்கிறார்கள். அதை நாம் பார்க்கும்பொழுது நம்முடைய பாராட்டுதலை அவர்களுக்கு தெரிவிக்காமல் இருக்க முடியாது. ஒரு வளப்பத்தின் நிலையை எப்படி நாம் அறிந்துகொள்ள முடியும் என்றால், 10 ஆண்டுகளுக்கு முன்பிருந்த சூழ் நிலையையும், இன்றைக்கு இருக்கிற சூழ்நிலையையும் இணைத்துப் பார்க்கும் பொழுது தான் இன்றைக்கு இருக்கிற ஒரு உயர்ந்த தரத்தின் நிலைமை நமக்கு நன்றாக விளங்கும். அப்படிப் பார்க்கும்பொழுது 1950-ம் ஆண்டிலே 17 லட்சம் கி. வா.

[Srimathi P. K. R. Lakshmikantham] [5th May 1962

மின்சாரம் தான் உற்பத்தி செய்யக்கூடிய திறன் நம்முடைய தமிழ் நாட்டிற்கு இருந்தது. ஆனால் இன்றைக்கு நாம் பார்க்கும் பொழுது கிட்டத்தட்ட 57 லட்சம் கி.வா. மின்சக்தி உற்பத்தி செய்யக்கூடிய திறனைப் பெற்றிருக்கிறோம் என்று சொன்னால், இதனை நாம் பெருமையாகக் கொள்ளாமல் இருக்க முடியாது. அதுவும் எப்படி மனிதனுக்கு உணவு அத்தியாவசியமோ, அது போல்தான் தொழிலுக்கு மின்சக்தி மிக மிக அத்தியாவசியமாக இருக்கிறது. நாம் இவ்வளவு அதிக லட்சம் கி.வா. மின்சக்தி உற்பத்தி செய்து தொழிலுக்கு பயன்படுத்தியிருக்கிறோம், உணவு உற்பத்தி பெருக்குவதற்காக விவசாயத்திற்கு பயன்படுத்தி இருக்கிறோம். அதுமட்டுமல்லாமல் வெளிச்சம் போடுவதற்காக, மக்களுடைய வாழ்க்கையையும் நல்ல முறையிலே திருத்தி அமைத்து, அவர்களுடைய வாழ்க்கையையும் வெளிச்சப்படுத்துவதற்காக இந்த மின்சக்தியை நாம் பயன்படுத்துகிறோம் என்று சொன்னால், அதை நாம் பெருமைப்படுத்திக் கொள்ளத்தான் வேண்டியிருக்கிறது. மேலும், எத்தனை கிராமங்களுக்கு மின்சக்தி வேண்டுமென்றாலும் கூட, உடனடியாக கொடுக்கப்படும் என்று மதிப்பிற்குரிய பிரதம என்ஜினியர் அவர்கள் சொல்லுகிறார்கள். அவரிடம் சென்று எப்பொழுது கேட்டாலும், அவர்கள் 'உடனே நீங்கள் பணம் கொடுத்தால் நாங்கள் கொடுப்பதற்கு தயாராக இருக்கிறோம்' என்று அவர்கள் சொல்லுகிறார்கள். அப்பொழுதுதான் நம்முடைய தமிழ் நாட்டின் மின்சக்தி உற்பத்தியின் திறனை நாம் தெரிந்துகொள்ள முடிகிறது. எவ்வளவோ மின்சக்தியை நாம் அதிகமாக உற்பத்தி செய்து பயன்படுத்திக் கொண்டாலும், நமக்கு இன்னும் பற்றாக்குறைதான் ஏற்படுகிறது. இன்னும் நமக்கு அதிகமாக பம்பு செட்டுகள் வேண்டும். 75 லட்சம் பம்பு செட்டுகளுக்கு நாம் மின்சக்தி கொடுத்தும் கூட, இன்னும் "அதிகமாக வேண்டும், வேண்டும்" என்ற குரல் எழும்புகிறது என்று சொன்னால், அது நம் தமிழ் நாட்டின் வளப்பத்தைத்தான் குறிக்கிறது. அதுபோலவே, தொழில்களுக்கும் இன்னும் மின்சாரம் வேண்டுமென்று மக்கள் சொன்னால், அது நம் தமிழ் நாட்டில் எவ்வளவு அதிகமான தொழில்கள் பெருகிக்கொண்டு வருகின்றன என்பதைக் குறிக்கிறது. மேலும், இந்த மின்சாரத்தின் மூலமாக, மற்ற எல்லாத் துறைகளையும் விட அதிகமான பயனை நாம் அடைந்திருக்கிறோம் என்று சொன்னால் அது மிகையாகாது. அவ்வளவு அதிகமாக மின்சார உற்பத்தி செய்தும் கூட, இந்த மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் கடைசியில் அதிகமான அளவுக்கு மின்சக்தி பற்றாக்குறை ஏற்படுமென்று கேட்கும்பொழுது நமக்கே அச்சம் ஏற்படுகிறது. ஆகவே, அணுசக்தி மின்சார நிலையம் ஒன்றை தமிழ் நாட்டில் அமைப்பதற்கு கனம் அமைச்சர் அவர்கள் முயற்சி எடுத்து, அதற்கு வேண்டிய சூழ்நிலையையும் உண்டு பண்ணி, அவசியம் தமிழ்நாட்டிலேதான் அது வைக்கப்படவேண்டுமென்று வற்புறுத்துவார்களேயானால், அது கட்டாயம் தமிழ் நாட்டிற்கு வந்துசேரும் என்பதில் சந்தேகமில்லை. அதற்கேற்ற சூழ்நிலையும் அமைந்திருக்கிறது என்று கனம் அமைச்சர் அவர்கள் கூறும்பொழுது நாம் ஆறுதல் அடையவேண்டியிருக்கிறது.

5th May 1962] [Srimathi P. K. R. Lakshmikantham]

அடுத்தபடியாக, இந்த மின் சக்தியில் 85 சதவிகிதத்தை மின் சார போர்டேதான் விநியோகம் செய்து வருகிறது. ஒரு சில கம்பெனிகளுக்கும், ஒரு சில ஸ்தல ஸ்தாபனங்களுக்கும் வினி யோகம் செய்யும் அதிகாரத்தை கொடுத்திருக்கிறார்கள். இந்த மாதிரி அந்தக் கம்பெனிகளுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிற அந்த வினியோகத்தையும் நமது போர்டு எடுத்துக்கொண்டால் நல்ல முறையில் செயல்படுமென்று எனக்குத் தோன்றுகிறது. கம்பெனிகளுக்குக் கடன் கொடுப்பதற்காக சில லட்சக்கணக்கான ரூபாயை ஒதுக்கி வைத்திருக்கிறார்கள். இருந்தாலும், அந்த விநியோகத்தையும் மின்சார போர்டே எடுத்துக்கொண்டால் இன்னும் நல்ல முறையில் செயல்படுமென்ற கருத்தைத் தெரிவித் துக்கொள்கிறேன். நான் நகரத்தில் வசிக்கிற ஒரு அங்கத்தினர் என்ற முறையிலே, சென்ற மூன்று வருஷமாக கோடை காலத்தில் மக்கள் அவதியுறும்படி நேராமல் மின்சக்தி வெட்டுக் கொண்டு வராமல் இருந்ததற்கு மின்சக்தி உற்பத்தியாளருக்கு என்னுடைய நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். குந்தா மின்சார நிலைய த்தை அங்கத்தினர்கள் அனைவரும் சென்று பார்க்கவேண்டும். சென்ற சட்டசபையில் இருந்த அங்கத்தினர்கள் ஒவ்வொருவரும் அதைப் பார்த்திருக்கிறார்கள். அந்தத் திட்டத்தைப் பார்க்கும் பொழுதுதான் நம்முடைய தமிழ்நாட்டிலே எவ்வளவு பெரிய திட்டங்கள் எல்லாம் நிறைவேற்றப்பட்டு வருகின்றன என்பது தெரியவரும். அந்தக் குந்தாத் திட்டத்தில் முதல் பகுதி, இரண் டாம் பகுதி வேலைகள் முடியப்பெற்று, மூன்றும் பகுதிக்குரிய பல வேலைகள் ஜரூராக நடைபெற்றுக்கொண்டு வருகின்றன என்று அறிக்கையில் சொல்லப்பட்டிருக்கிறது. மூன்றும் பகுதி நிலைய வேலை முற்றுப் பெற்றால், அதிலிருந்து நமக்கு அதிகமான மின் சக்தி கிடைக்கும். நெய்வேலி அனல் மின்சக்தி நிலையம் முடியும் தருவாயில் இருக்கிறது. அதுவும் முடிந்தால், அதிலிருந்து கிடைக்கக்கூடிய அதிகமான மின்சக்தியின் பயனைக மினிமம் சார்ஜும் குறைக்கப்படலாமென்ற சூசகமும் காணப்படுகிறது.

மேலும் தென் பிராந்திய இணைப்பைப் பற்றி குறிப்பிடப்பட் டிருக்கிறது. இந்த இணைப்பிற்காக பல முயற்சிகள் நடைபெற்று வருகின்றன. அந்த இணைப்பு இல்லாமல் இருந்தால் நலமென்று நான் கருதுகிறேன். இன்னும் ஒரு ஐந்தாண்டு காலமாவது நமது தமிழ்நாட்டில் உற்பத்தி செய்யப்படுகிற மின்சக்தி, பல தொழில் களுக்குப் பயன்படுத்தப்பட்டு, இன்னும் அதிகமான கிலோவாட் மின்சக்தி உற்பத்தி செய்யும் திறனைப் பெற்ற பிறகு, இந்த தென் பிராந்திய மண்டலம் ஏற்படுத்தப்பட்டால் நலமாக இருக்கு மென்று நான் கருதுகிறேன். ஆகவே, இவற்றை எல்லாம் நமது அமைச்சர் அவர்கள் தீர ஆலோசித்துச் செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

மதுரை நகரசபை மின்சாரப் பகுதியில் வேலை செய்கிறவர் களுக்கும், மின்சார போர்டில் வேலை செய்கிறவர்களுக்கும் சம்பள விகிதத்தில் வித்தியாசம் இருப்பதாகத் தெரிகிறது. அந்த வித்தி யாசத்தை நீக்கிவிடவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். மின்

சார போர்டில் வேலை பார்க்கும் எல்லாத் தர உத்தியோகஸ்தர்களுக்கும் என்ன சம்பள அடிப்படை இருக்கிறதோ, அந்த அடிப்படையிலே மதுரை நகரசபையில் மின்சாரப் பகுதியில் வேலை பார்க்கும் எல்லாவித உத்தியோகஸ்தர்களுக்கும் சம்பள விகிதம் கொடுக்கப்படவேண்டுமென்று ஓர் உத்தரவை நம்முடைய சர்க்கார் மதுரை நகரசபைக்கு அனுப்பி வைக்கவேண்டுமென்று சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். இதை நான் சொல்லும் பொழுது, மின்சார போர்டு வேறு, சர்க்கார் வேறு என்று சொல்லலாம். போர்டில் கொடுக்கப்படுகிற சம்பள விகிதத்தைக் கொடுக்க வேண்டுமென்று சர்க்கார் நகரசபைக்கு உத்தரவு அனுப்பி வைக்க முடியாது என்று கூறலாம். இருந்தாலும்கூட, ஒரே எஞ்சினியரிங் கலலூரியில் படித்த எஞ்சினியர்களுக்கு, மதுரையில் வேலை செய்தால் ஒரு சம்பள விகிதம், போர்டின்கீழ் வேலை செய்தால் ஒரு சம்பள விகிதம் என்றிருப்பது அவர்களுக்கு வருத்தத்தைக் கொடுக்கக்கூடியதாக இருக்கிறது. அந்த வித்தியாசத்தை நீக்குவதற்கான ஒரு உதவியைச் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, மின்சார போர்டு நிலையத்தில் வேலை செய்யும் ஊழியர்கள் அறிகுறி வேலை நிறுத்தம் செய்ததாகச் சொன்னார்கள். எந்த உற்பத்தியாக இருந்தாலும் சரி, வேலை நிறுத்தத்திற்கு எந்தக் கட்சியும் ஆதரவு கொடுக்கக் கூடாது என்பதைத் தங்கள் மூலமாக இந்த சபையில் நான் கேட்டுக்கொள்ள ஆசைப்படுகிறேன். ஏனென்றால் நம்முடைய நாடு சுதந்திரம் பெற்று சில ஆண்டுகள்தான் ஆகின்றன. இன்னும் எத்தனையோ தொழில்கள் முன்னேற்றம் அடையவேண்டும். அப்படி இருக்கும்பொழுது, நம்முடைய தமிழ்நாட்டில் தொழில் வளம் கணிசமாக குறைந்திருக்கிறது என்று கருதுகிற திராவிட முன்னேற்றக் கழகம், இந்த மாதிரி வேலை நிறுத்தத்திற்கு தங்களுடைய ஆதரவை கொடுக்கக் கூடாது என்று தங்கள் மூலமாக நான் கேட்டுக்கொள்கிறேன். எந்தத் தொழிலாக இருந்தாலும் சரி, வேலை நிறுத்தமென்பது நாட்டின் முன்னேற்றத்திற்கு ஒரு பெரிய தடை என்று கருதவேண்டும். குறிப்பாக, இந்த மின் சக்தி ஊழியர்களின் வேலை நிறுத்தம் நாட்டின் தொழில் அபிவிருத்திக்குத் தடையாக இருக்கக்கூடும். ஏற்கனவே திருத்தியமைக்கப்பட்ட சம்பளத்தை மற்ற தொழிலாளர்கள் வாங்கிக் கொண்டது போன்று, அப்படி வாங்கிக்கொள்ளாத தொழிலாளர்களும் பெற்றுக்கொண்டு, தங்களுக்கு வேண்டிய ஒரு நல்ல சூழ்நிலையை தாங்களே ஏற்படுத்திக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொண்டு, என்னுடைய பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

*SRI R. S. VEERAPPA CHETTIAR : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மின்சார பட்ஜட் மீது சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். மின்சார போர்டானது, நிதியை அதிகரிக்கும் தொழிலில் ஈடுபட்டிருக்கிறதே ஒழிய, விவசாயிகள் கஷ்டத்தை கவனிக்கவில்லை. விவசாயிகள் குறைகளை உடனுக்குடன் நிவர்த்

5th May 1962] [Sri R. S. Veerappa Chettiar]

திக்க மின்சார போர்டார் முன்வருவதில்லை. மின்சார விஸ்தரிப்புக் கேட்டால், மிகவும் காலதாமதம் ஏற்படுகிறது. காரணம சாமான் கள் இல்லை என்று சொல்கிறார்கள். மேலும் மீட்டர்கள் கிடைக்க வில்லை என்று சொல்கிறார்கள். மீட்டர்கள் கிடைக்கவில்லையென் றால், விவசாயிகளே தாங்கள் மீட்டர் வாங்கிக்கொடுத்து தங்க ளுக்கு சர்விஸ் கொடுக்கும்படி கேட்டால் அதையும் கொடுக்க மறுக்கிறார்கள். அதோடு 100 ஹார்ஸ் பவர் இருந்தால், ஒரு திட் டத்தைக் கொண்டுவரலாம் என்று சொன்னால், 95 ஹார்ஸ் பவர் சேர்த்துவிட்டால், மிச்சம் இருக்கும் 5 ஹார்ஸ் பவர் இல்லை என்று அனேக மாதங்கள் காலதாமதம் ஏற்படுகிறது. அவர்கள் வைக்கும் முறைகளைக் கடைபிடிக்க முடியாததால் அநேக கிரா மங்களுக்கு விஸ்தரிப்புக் கொடுக்க முடியவில்லை. ஆகவே பிற்போக்காக உள்ள இடங்களுக்கு சலுகைகள் கொடுத்து ஆவன செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

விவசாயிகளுக்கு உள்ள அனேக விதமான குறைகளை எடுத் துரைக்க விரும்புகிறேன். கனம் அமைச்சரவர்கள் இனிமேல் மின்சார வெட்டு இருக்காது என்று சொன்னதற்கு மகிழ்ச்சி தெரி விக்கிறேன். அப்படிப்பட்ட நிலைமையில் விவசாயிகளுக்கு பகல் நேரத்திலும் மின்சாரம் கொடுக்க ஏற்பாடு செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அப்படிச் செய்தால், பகல் முழுதும் வேலைசெய்துவிட்டு விவசாயிகள் இராக்காலத்தில் நிம்மதியாக இருக்க முடியும். பம்புசெட்டுகளோடு ரேடியோக் களுக்கும் சப்ளை வேண்டுமென்றால், அதற்காக தனி சர்விஸ் வாங்க வேண்டும் என்று வற்புறுத்துகிறார்கள். தயவுசெய்து, அவர்கள் பம்புசெட்டுகளுக்கு வாங்கும் சர்விஸோடு ரேடியோவும் வைத்துக் கொண்டு ஆனந்திக்கும்படி செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். பருவ மழை பெய்யாத காலங்களில் விவசாயி கள் கஷ்டப்படும்போது, ஆன்யுவல் மினிமம் சார்ஜ் ரெமிஷன் கொடுத்து அவர்கள் கஷ்டத்தை நிவர்த்திக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். இப்பொழுது, மெயின் கனிலிருந்து 2 பர்லாங் தூரத்திலும், கிளை கனிலிருந்து ஒரு பர்லாங் தூரத் திலும் விவசாயிகள் தங்கள் கிணறுகளில் பம்புசெட்டுகள் வைக்கக் கூடாது என்ற உத்தரவு இருக்கிறது போல் தோன்றுகிறது. இதனால் விவசாயிகள் பாதிக்கப் படுவதால், அப்படிப் பட்ட விதியைத் தக்க வகையில் தளர்த்தி பம்புசெட்டுகள் வைத்துக் கொள்ளக் கூடிய வழிவகைகளைச் செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

பொதுவாக மின்சார வினியோகம் கம்பெனிகளுக்குக் கொடுக் கப்பட்டிருப்பதை, தேசியமயமாக்கவேண்டுமென்று கூறப்பட்டது. அதில் முதன்முதலாக ஈரோடு-சேலம் எலெக்ட்ரிக் கம்பெனியை தேசீயமயமாக்க தக்க நடவடிக்கைகள் எடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். ஹொகெனக்கலில் ஏற்படுத்தப் போகும் மின்சார திட்டத்தை, மின்சாரத்திற்காக மட்டுமின்றி, நீர்ப்பாசனத் திற்காகவும் ஏற்பாடு செய்யவேண்டுமாய்க் கேட்டுக் கொள்ளு கிறேன்.

இப்பொழுது பஞ்சாயத்துக்கள் தெருவிளக்குகள் போட விண்ணப்பம் கொடுத்தால், பல வருஷங்கள் ஆனாலும் கொடுப்பதில்லை. காரணம், கம்பம் கிடைக்கவில்லை, மற்ற சாமான்கள் கிடைக்கவில்லை என்று சொல்லுகிறார்கள். தெரு விளக்குகள் போடுவதில், ட்யூப் விளக்குகள் போட்டால் பாதிக்குமேல் எரிவதில்லை. இந்த விதமான குறைகளையெல்லாம் நீக்க தக்க நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

பிற்போக்கான பிரதேசங்களுக்கு மினிமம் சார்ஜ் ரூ. 35 என்று இருந்தாலும், பல பாகங்களில் அது அமுலாக்காமல் இருப்பதால், இன்னும் ரூ. 50 வசூலிக்கிறார்கள். இந்த விஷயத்தில் தக்க நடவடிக்கை எடுக்கவேண்டு மென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

மின்சாரத் துறையில் வேலைசெய்கிறவர்கள் அபாயத்திற்குள்ளாகக்கூடியவர்கள். ஆகவே, அவர்களுக்கு ஊதிய உயர்வு சரியாகக் கவனிக்கப்படவில்லையென்று கோர்டில் ஒரு தாவா போட்டு நடந்து கொண்டிருப்பதாகக் கேள்விப்பட்டேன். அவர்களுடைய குறைகளைத் தவிர்த்து அவர்களுக்கு ஊக்கம் அளிக்குமாறு கேட்டுக்கொள்ளுகிறேன். தினசரிக் கூலிகளான என். எம். ஆர். கூலிகளுக்கு பதவி உயர்வுகள் கொடுப்பதில்லை. அவர்களுடைய திறமையையும் கவனித்து அவர்களுக்கும் பதவி உயர்வு கொடுக்க தக்க நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

இந்த மாதிரியான விவசாயிகளின் குறைகளைக் கவனித்து நல்ல முறையில் நடவடிக்கை எடுக்க வேண்டு மென்று கேட்டுக் கொள்ளுகிறேன். இந்த வாய்ப்பு கொடுத்தமைக்கு வணக்கம் தெரிவித்து என் உரையை முடிக்கிறேன்.

**Sri M. DHANDAYUTHAPANI** : *கனம் உதவி சபாநாயகர் அவர்களே, தமிழ்நாடு மின்சார இலாகா 1962-63-ம் ஆண்டு நிதி நிலை அறிக்கையை ஆதரித்து இரண்டொரு வார்த்தைகள் கூறிக் கொள்ள விரும்புகிறேன். மூன்றாவது திட்டத்திலே 8,000 கிராமங் களுக்கு மின்சார வசதி செய்யப் பட்டிருப்பதாகவும், இதில் முதல் ஆண்டில் 1,600 கிராமங்களுக்கு செய்ய உத்தேசம் என்று இருந் தாலும், 1,850 கிராமங்களுக்கு செய்யப்பட்டிருப்பதாக அறிக் கையில் சொல்லப்பட்டிருக்கிறது. அதை வரவேற்கிறேன். மேலும் இந்த நேரத்தில், இந்த மின்சார விஸ்தரிப்பில் தஞ்சை ஜில்லா புறக்கணிக்கப்பட்டிருக்கிறது. நான் சொல்வதற்கு முன்பாகவே, கோவை அங்கத்தினர் ஒருவரும், நெல்லை அங்கத்தினர் ஒருவரும் இதை எடுத்துக்காட்டினார்கள். குறிப்பாக என்னுடைய தொகுதியை எடுத்துக்கொண்டால், அதில் 152 கிராமங்கள் இருக்கின்றன; அதில் ஆறே ஆறு கிராமங்களுக்குத்தான் மின்சார வசதி இருக் கிறது. இந்த நிலையை மாற்றி அமைக்கவேண்டும். இதற்குக் காரணம் உண்டு. இந்த அறிக்கையிலே சென்னையில் 85 சதவிகிதம் சர்க்காரின் மேற்பார்வையில் இருப்பதாகவும், பாக்கி 15 சதவிகிதம் தனியார் துறையில் இருப்பதாகவும் சொல்லப்பட்டிருக்கிறது. இதில் தஞ்சை ஜில்லா வினியோகம் ஒரு தனியார் கம்பெனியின்*

கையில் இருக்கிறது. ஆகவேதான் விஸ்தரிப்பில் காலதாமதம் ஏற்படுகிறது. குறிப்பாக மூன்று ஆண்டு காலத்திற்கு முன்னதாக சர்வே செய்யப்பட்ட கிராமங்களுக்கு இன்னும் வசதி செய்து கொடுக்கப்படவில்லை. அவர்களைக் கேட்டால் சர்க்காரிலிருந்து கடன் வாங்கிக் கொடுத்தால் தருகிறோம் என்று கூறுகிறார்கள். அப்படி சர்க்காரிலிருந்து அவர்களுக்குக் கடன் வாங்கி கொடுத்த போதிலும் அதாவது 5¼ சதவிகிதத்திற்கு கடன் வாங்கிக் கொடுத்த போதிலும் இன்னும் அதிகமான தொகை வேண்டும் என்றும் சொல்லுகிறார்கள். மற்றும் கிராமங்களுக்கு மின்சாரத்தை விஸ்தரிக்க வேண்டும் என்று சொன்னால் அவர்கள் கொடுக்கும் தொகைக்கு 15 சதவிகிதம் கேட்கிறார்கள். அதாவது 5¼ சதவிகிதத்திற்கு வாங்கி 15 சதவிகிதத்திற்குக் கொடுக்கிறார்கள். அந்த அளவில் அவர்கள் உத்தரவாதத் தொகை கேட்கிறார்கள். ஆகவே அதிகமான தொகை கேட்கக்கூடிய அளவில் கிராமங்களில் நிலைமை இருக்கிறது. அந்த நிலையை மாற்றி சாதாரணமாக பத்து சதவிகிதமாவது கிடைப்பதற்கு வேண்டிய வசதி செய்து கொடுக்க வேண்டும். அப்படிச் செய்து கொடுத்தால் தஞ்சை ஜில்லாவில் மின்சாரத்தை விஸ்தரிப்பதற்கு வாய்ப்பு ஏற்படும் என்பதை இந்தச் சந்தர்ப்பத்தில் கூறிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

12-30 p.m.

ஏற்கனவே நான் கவர்னர் உரையின் மீது பேசும்போது இதைப்பற்றி குறிப்பிட்டிருக்கிறேன், அதாவது விவசாய பம்பு செட்டுகளுக்கு மின்சாரம் கொடுக்கப்பட வேண்டும் என்று. ஓர்த்தநாடு போன்ற பகுதிகளில் மின்சாரம் கொடுக்க வேண்டும் என்றும் அப்படிக் கொடுத்தால் பம்பு செட்டுகளை உபயோகப் படுத்தலாம் என்றும் கூறுகிறார்கள். அதையே மீண்டும் வற்புறுத்த விரும்புகிறேன்.

அணு சக்தி மின்சார நிலையங்களை அமைப்பது பற்றி ஆராய்ச்சி செய்வதாகவும் அதற்காக இரண்டொரு இடங்களைப் பார்வையிட்டதாகவும் கனம் அமைச்சர் கூறினார். அதில் செங்கற்பட்டு மாவட்டத்தில் ஒன்றை அமைக்க ஆலோசனை செய்வதாகவும் குறிப்பிட்டார். மற்றொன்றை அமைப்பதற்கு தஞ்சையை எடுத்துக் கொள்ளலாம். அங்கு அதற்கு வேண்டிய வசதியெல்லாம் இருக்கிறது. தஞ்சை மாவட்டத்தில் அதிகப்படியான மின்சாரம் இல்லாத காரணத்தால் அந்த மாவட்டத்தில் மற்றொரு நிலையத்தை அமைக்க முடிவு செய்யலாம். ஆகவே தஞ்சை மாவட்டத்தில் அமைக்க வேண்டும் என்று கூறிக்கொள்ள ஆசைப்படுகிறேன். இந்த மின்சார இணைப்பு சம்பந்தமாக தென் மண்டல கவுன்சிலினால் அமைக்கப்பட்ட குழு ஒன்று அமைக்க உத்தேசித்துக்கொண்டிருப்பதாக கூறினார்கள். அப்படி அமைத்தால் தென் மாகாணங்கள் நான்கையும் சேர்த்து அவைகள் எல்லாவற்றிற்கும் மின்சாரம் கொடுக்கக்கூடிய நிலைமை ஏற்படும். நாம் மின்சாரத்தை உற்பத்தி செய்வதெல்லாம் இங்கே இருக்கக் கூடிய தண்ணீரை உபயோகித்துக்கொண்டுதான் உற்பத்தி

செய்கிறோம். ஆகவே நாம் பக்கத்து மாகாணங்களுக்கு விநியோகிக்க வேண்டுமானால் நாம் அவர்களிடமிருந்து தண்ணீர் வாங்கிக்கொள்ளக்கூடிய நிலைமை ஏற்படுகிறது. ஆகவே அந்த முறையில் அண்டை ராஜ்யங்களிலிருந்து தண்ணீரை நாம் வாங்கிக் கொள்வதற்கு வேண்டிய முயற்சிகளை கனம் அமைச்சர் அவர்கள் எடுத்துக்கொள்ள வேண்டும். அதற்கு வேண்டிய முயற்சியும் செய்வார் என்று நினைக்கிறேன்.

கடைசியாக ஹோகனேக்கல் என்ற இடத்தில் ஓர் அணைக்கட்டு கட்டி அதிலிருந்து மின்சாரத்தை உற்பத்தி செய்வதாகச் சொல்லப் பட்டிருக்கிறது. மின்சாரம் உற்பத்தி செய்வதோடு காவிரியில் வரக் கூடிய வெள்ளத்தைத் தடுப்பதற்கு வசதியாக இருக்கும் என்றும் சொல்லப்படுகிறது. அப்படி வெள்ளத்தையும் தடுக்கலாம், அப்படித் தடுப்பதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருப்பதாகவும் அறிக்கையில் கூறப்பட்டிருக்கிறது. கடந்த சட்டசபையில் பட்டுக் கோட்டை அங்கத்தினராக இருந்த கனம் ஆர். ஸ்ரீனிவாச அய்யர் அவர்கள் சொல்லியிருக்கிறார். சாதாரணமாக காவிரி ஆற்றில் இருபது ஆண்டுகளுக்கு ஒரு தடவைதான் வெள்ளம் வருகிறது. ஹோகனேக்கலில் அணையை கட்டுவதால் தஞ்சை ஜில்லாவிற்கு பாசன வசதிக்கு தட்டு ஏற்படும் என்றும் கூறியிருக்கிறார். அத் துடன் தஞ்சை ஜில்லாவில் பாசன வசதி குறைவாக உள்ள எத்தனையோ பகுதிகள் இருக்கின்றன. ஆகவே இந்த அணைக்கட் டினால் தஞ்சை ஜில்லாவில் மேலும் பாசனத் தட்டு ஏற்படாமல் இருக்க வேண்டும். அந்த ஒரு நிலையில் கனம் அமைச்சர் அவர்கள் அதை கவனித்து ஆவன செய்வார்கள் என்று நினைக்கிறேன். குறிப்பாக கனம் அமைச்சர் அவர்கள் தஞ்சை ஜில்லாவைச் சேர்ந்தவர் என்பதனால், அதிலும் அவர் பட்டுக்கோட்டையைச் சேர்ந்தவராக இருப்பதால் அவர் தஞ்சை ஜில்லாவை புறக்கணிக்க மாட்டார் என்றே நம்புகிறேன். ஆகவே அந்த முறையில் தஞ்சை ஜில்லாவை புறக்கணிக்காமல் தஞ்சை ஜில்லா கிராமங் களுக்கு மின்சார வசதி செய்து கொடுக்க வேண்டும் என்று இந்தச் சந்தர்ப்பத்தில் கேட்டுக்கொண்டு இந்த சந்தர்ப்பத்தில் நான் பேசுவதற்கு அனுமதி கொடுத்த கனம் உதவி சபாநாயகருக்கு என் நன்றியைத் தெரிவித்துக்கொண்டு என்னுடைய சிற்றுரையை இத்துடன் முடித்துக்கொள்ளுகிறேன். வணக்கம்.

SRI K. S. SUBRAMANIA GOUNDER: கனம் உதவி சபா நாயகர் அவர்களே, தமிழ்நாட்டு மின்சார சபையின் 1962-63-ம் ஆண்டு நிதி நிலை அறிக்கையை வரவேற்று சில வார்த்தைகளைக் கூற விரும்புகிறேன். நம்முடைய தமிழ்நாட்டு மின்சார சபை யானது இதற்கு முன்னால் சர்க்கார் இலாகாவாக இருந்தபோதும் நல்ல முறையில் சென்ற பத்து ஆண்டுகளாக பணியாற்றி வருகிறது. குறிப்பாக இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் மின்சார உற்பத்தியும் மின்சார விநியோகமும் நல்ல முறையில் முன்னேற்றமடைந்திருக்கிறது என்று சொன்னால் அது மிகையாகாது. அதைப்பற்றிச் சொன்னால் அது மிகுதி அல்லவே இல்லை. இதைவிட இன்னும் அதிகமாகச் செய்வதற்கு வசதி

இல்லை. அதே சமயத்தில் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் எவ்வளவு அதிகமாக விரிவுபடுத்த வேண்டுமென்று கருது கிறோமோ அந்த அளவில் விரிவுபடுத்துவதற்கு வேண்டிய நடவடிக் கைகளும் எடுத்துக்கொள்ள திட்டமிடப்பட்டிருக்கிறது. அப்படி அதிகமாக உற்பத்தி செய்வதற்கு ஹோகனேக்கல் போன்ற திட்டத்தை எடுத்து நடத்துவதாகவும் சொல்லப்படுகிறது. அப்படி ஹோகனேக்கல் திட்டத்தை எடுத்துக்கொண்டால்தான் பல காரியங்களை நல்ல முறையில் முடிக்க முடியும் என்று அதில் கண்டிருக்கிறது. எனக்கு முன் பேசிய கனம் அங்கத்தினர் ஒரு புதிய விஷயத்தை சொன்னார். அதாவது ஹோகனேக்கல் திட்டத்தை எடுத்து நடத்தினால் தஞ்சை ஜில்லாவில் பாசன வசதி மிகவும் பாதிக்கும் என்று குறிப்பிட்டார். சாதாரணமாக எதைச் சொல்லும்போதும் தஞ்சை ஜில்லாவில் பாசன வசதி பாதிக்கப்படும் என்று ஒரு குறை சொல்லப்படுவது உண்டு. இந்தத் திட்டத்தை எதற்குக் கொண்டு வருகிறார்கள். மின்சார உற்பத்தியை அதிகப்படுத்த வேண்டும் என்பதற்காகத்தான். அப்படி மின்சார உற்பத்தியை அதிகப்படுத்தினால் அதனால் தஞ்சை ஜில்லாவும் பயனடையும் என்பதை கவனிக்க வேண்டும். அங்கு அணை கட்டுவது என்பது முழுக்க முழுக்க மின்சார உற்பத்திக்குத்தான். அதற்காகத்தான் அதைக் கட்டுகிறார்கள். அதன் மூலமாக தஞ்சையில் வரக்கூடிய வெள்ளத்தையும் தடுக்கலாம் என்பதற் காகத்தான் அதைக் கட்டுகிறார்கள். தஞ்சை ஜில்லாவின் நன்மையை உத்தேசித்தும்தான் அந்த அணையைக் கட்டுகிறார்கள் என்பதை கனம் அங்கத்தினர் மறந்துவிடக்கூடாது என்பதையும் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். ஆகவே இதைப்பற்றி ஆட்சேபிக்க வேண்டியதில்லை. தஞ்சை ஜில்லா வெள்ளத்தால் மிகவும் பாதிக்கப்படுவதால் இதை சீக்கிரத்தில் எடுத்து முடிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அதன் பயனாக எட்டு லட்சம் கிலோ வாட்ஸ் மின்சாரம் கிடைக்கும் என்றும் சொல்லப் படுகிறது. இது எல்லோராலும் வரவேற்கக்கூடிய விஷயம்தான். ஆகவே அதை மூன்றாவது திட்ட காலத்திலேயே எடுத்து முடிக்க முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்வ தோடு அந்த திட்டக் காலத்திற்குள்ளாகவே முடிப்பதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும் என்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன். அதைப்போலவே மேட்டூர் சுரங்க நீர் மின்சாரத் திட்டத்தையும் இந்த மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்திலேயே எடுத்து முடிக்க ஏற்பாடு செய்ய வேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளு கிறேன். நமது மின்சார இலாகா நல்ல முறையிலே பணியாற்றி வருகிறார்கள். அதை நாம் பாராட்ட வேண்டியதுதான. நமக்கு போதிய அளவு மின்சார உற்பத்தி நிலையங்கள் இல்லாத காரணத்தால் நாம் நீர்த்தேக்கங்களை நம்பி இருக்க வேண்டியதாக இருக்கிறது. நம்முடைய தமிழ்நாட்டில் இரண்டு இடங்களில் அணு சக்தி நிலையங்களை அமைக்கப் போவதாக சொல்லப் படுகிறது. அவற்றில் ஒன்று மகாபலிபுரத்திலும் மற்றொன்று ஹோகனேக்கலுக்குப் பக்கத்திலும் என்று சொல்லப்படுகிறது.

[Sri K. S. Subramania Gounder] [5th May 1962

அதை நான் பேப்பர் வாயிலாகப் பார்த்தேன். அது எப்படி இருந்த போதிலும் தமிழ்நாட்டில் எந்த எந்த இடங்களில் அமைக்க வாய்ப்பு இருக்கிறதோ அந்த இடங்களிலெல்லாம் அமைக்க ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும் என்று கனம் அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். அப்படி எந்த எந்த இடங்களில் வைத்து உற்பத்தி செய்ய முடியுமோ அந்தந்த இடங்களில் வைத்து உற்பத்தி செய்து தமிழ்நாடு பூராவிலும் விநியோகம் செய்ய நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும். எந்த இடத்தில் வைத்தாலும் அங்கு வைத்து உற்பத்தி செய்து தமிழ்நாடு பூராவிலும் விநியோகம் செய்யலாம். அது எந்த இடமாக வேண்டுமானாலும் இருக்கலாம். ஆகவே, சேலம், ஹொகனேக்கல் முதலிய இடங்களில் வைக்க ஏற்பாடு செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

நம்முடைய தமிழ்நாட்டில் மின்சாரத்தை நல்ல முறையில் விவசாயத்திற்கும் தொழில்களுக்கும் விஸ்தரித்துக்கொண்டு வருகிறோம். அவைகளுக்கு மிகவும் நல்ல முறையில் பயன்படுத்திக்கொண்டு வருகிறோம். தமிழ்நாட்டில் மின்சார விநியோகம் எட்டு லைசென்சுதாரர்களிடம் இருப்பதால் விவசாயத்திற்கும் பம்பு செட்டுகளுக்கும் எந்த விதமான அபிவிருத்தியும் இல்லாத அளவில் இருக்கிறது. அதை நான் மிகவும் வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன். எந்தெந்த இடங்களில் மின்சாரம் கிடைக்காமல் விவசாயமும் தொழிலும் பாதிக்கப்பட்டிருக்கிறது என்பதை ஆராய்வதற்கு அதற்கான ஒரு கமிட்டியை நியமித்து அதைப்பற்றி பரிசீலனை செய்து ஒரு முடிவு எடுக்கலாம். அப்படிச் செய்தால் அது மிகவும் உசிதமாக இருக்கும் என்பதை தெரிவித்துக் கொள்ளுகிறேன். இதற்கு முன்னால் மின்சார விநியோகம் அரசாங்கத்தினுடைய கையில் இருந்தபோது ஏதோ கிராமங்களுக்கு கிடைத்து வந்தன. தனியாரிடம் இருப்பதால் சில இடங்களுக்கு மின்சாரம் கிடைக்கவில்லை. அதனால் விவசாயிகள் மிகவும் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். குறிப்பாக, சேலம் ஜில்லாவில் சேலம்-ஈரோடு எலெக்டிரிக் கார்ப்பொரேஷனிடம் இருப்பதால் மின்சாரம் சரியாகக் கிடைக்கவில்லை. அதன் பிறகுதான் அரசாங்கம் அதை எடுத்து நடத்த முன் வந்தார்கள். அதைப் போலவே தனிப்பட்டவர்களிடம் இருப்பதை அரசாங்கமே எடுத்து நடத்தினால் இன்னும் அதிகப்படியாக மின்சாரத்தை விநியோகம் செய்ய முடியும் என்று தோன்றுகிறது. நம்முடைய ராஜ்யத்தை எடுத்துக்கொண்டால் மற்ற ராஜ்யங்களைவிட அதிகமான லைசென்சுதாரர்கள் இருக்கிறார்கள். அவைகளையெல்லாம் அரசாங்கமே எடுத்து நடத்த வேண்டும். அப்படி எடுத்து நடத்தினால் எந்த விதமான கஷ்டமும் இராது. இதற்கு காம்பென்சேஷன் தொகை கொடுக்க வேண்டும் என்று சொல்லுகிறார்கள். அப்படிக் கொடுப்பதாக இருந்தால் மொத்த காம்பென்சேஷன் தொகை 20 கோடி ரூபாய் அல்லது சுமார் 30 கோடி ரூபாய் அளவு கொடுக்கும்படியாக இருக்கும் என்று சொல்லப்படுகிறது. ஆகவே அதை சீக்கிரம் எடுத்துக்கொள்வதற்கு கனம் அமைச்சர் அவர்கள் முயற்சி செய்ய

5th May 1962] [Sri K. S. Subramania Gounder]

வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். இதற்காக 200 லட்சம் ரூபாய் கடன் கொடுப்பதாகவும் ஆய்வைக்கப்பட்டிருக்கிறது. இந்தக் கம்பெனியைப் பின்னால் சர்க்கார் எடுத்துக்கொள்ளும்போது, இந்தக் கடன் கொடுக்கிற தொகைக்காகவும் நஷ்ட ஈடு கொடுக்க வேண்டியிருக்கும் என்ற காரணத்தால், இந்த பட்ஜெட்டிலேயே ஏதாவது செய்ய முடியுமா என்பதையும் அமைச்சர் அவர்கள் யோசிக்கவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கின்றேன்.

சங்ககிரி தொகுதியில், திருச்செங்கோடு தாலூகா போன்ற இடங்களில், எந்த இடம் கம்பெனிக்குச் சேர்ந்தது, எது கம்பெனிக்குச் சேர்ந்தது அல்ல என்பதை உடனடியாகக் கண்டு பிடித்து, எந்த இடம் கம்பெனி ஏரியா இல்லையோ அந்த இடத்தில் எல்லாம் உடனடியாக மின்சாரத்தை விஸ்தரிக்க ஏற்பாடு செய்ய வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கின்றேன்.

சேலம் ஜில்லாவில், மேட்டூர் கனல் ஏரியாவில் மின்சார விநியோகம் செய்வதில்லை, லோயர் பவானிப் பிரதேசத்திலும் விவசாயத்திற்கு மின்சாரம் கொடுப்பதில்லை என்பதை அரசாங்கம் திட்டவட்டமாக வைத்துக்கொண்டிருக்கிறார்கள். இதைத் தளர்த்தி, மேட்டூர் கனல் ஏரியாவிலும், லோயர் பவானி ஏரியாவிலும், விவசாயத்திற்கு மின்சார வசதி செய்துகொடுக்க வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கின்றேன்.

மினிமம் காரண்டியைப்பற்றி பல அங்கத்தினர்கள் குறிப்பிட்டார்கள். ஐம்பது ரூபாய் மினிமம் காரண்டியாக வாங்கப்படுகிறது. பின்தங்கிய பகுதி என்ற காரணத்தால் அங்கு 35 ரூபாய் வாங்குகிறார்கள் என்ற நிலைமை இருக்கிறது. எது பின்தங்கிய பகுதி, எது பின்தங்கிய பகுதி அல்ல என்பதைக் கணக்கிடும் போது, எந்த இடத்திலே நீர் மட்டம் ஆழமாக இருக்கிறதோ அதுதான் மின்சாரத்தைப் பொறுத்தவரையிலும் பின்தங்கிய பகுதி என்று வைத்துக்கொள்வது உசிதம். மிக ஆழமான இடத்திலிருந்து தண்ணீர் இறைப்பதுதான் மிகவும் சிரமம். எங்கு தண்ணீர் குறைவாக இருந்தாலும், அந்த இடத்திற்குத் தான், அதிக சலுகை கொடுக்கவேண்டும் என்பதை நான் வலியுறுத்திக் கூற விரும்புகிறேன். எல்லா இடங்களுக்கும் 35 ரூபாய் என்று வைத்துக்கொள்வதில் ஆட்சேபனை இல்லை. குறிப்பாக, எந்த இடத்தில் "வாட்டர் டேபிள்" கீழாக இருக்கிறதோ, அந்த இடத்திற்கு 35 ரூபாய் "மினிமம் காரண்டி" என்று இருக்கவேண்டும் என்று தெரிவித்துக்கொள்கின்றேன்.

1949-50-லே இரண்டு ஆண்டுகளுக்கு காரண்டி கொடுத்தால் போதும் என்று வைத்திருந்தார்கள். ஐந்தாண்டுகளுக்கு மினிமம் காரண்டி 'பீரியட்' இருந்தால் போதும் என்று நான் வலியுறுத்திக் கூறுகின்றேன். பத்து ஆண்டு என்பதை இருபது ஆண்டுகளாகச் செய்யவேண்டுமென்று சொன்னார்கள். பத்து என்பதை உயர்த்துவது உசிதமாக இருக்காது என்று நான் கருதுகின்றேன். குறைக்க முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டுமே தவிர, அதிகப் படுத்துவது உசிதம் அல்ல.

விவசாயத்திற்கு பம்ப் செட் வைக்கும்போது, ஸ்டார்ட்டர்களும் ஸ்விட்ச்களும் கிடைப்பதிலே சிரமம் இருக்கிறது. அவை நியாயமான விலைக்குக் கிடைக்கும் வகையில் அரசாங்கம் ஏற்பாடு செய்யவேண்டுமென்று பல தடவை எடுத்துச் சொல்லியிருக்கிறோம். அதைத் திரும்பவும் வலியுறுத்திச் சொல்லி, அதற்கான ஏற்பாடுகளை அரசாங்கம் செய்யவேண்டுமென்று நான் நெரிவித்துக் கொள்கின்றேன்.

இந்த இலாகா மிக நல்ல முறையில் பணி செய்து இருக்கிறது. இதற்காக இதனுடைய பிரதம இன்ஜினீர் அவர்களுக்கு என்னுடைய பாராட்டுதலைத் தெரிவித்து என்னுடைய வார்த்தைகளை முடித்துக்கொள்கின்றேன்.

* SRI R. ABDUL KHALEEL : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, தமிழ்நாட்டு மின்சார சபையின் 1962-63-ம் ஆண்டுக்கான நிதி நிலை அறிக்கையின்மீது நான் இரண்டொரு வார்த்தைகள் பேசக் கடமைப்பட்டிருக்கிறேன்.

இந்திய உப கண்டத்திலேயே தமிழ்நாட்டு அரசு, மின்சார உற்பத்தியில் திட்டமிட்டு தீவிர கவனத்தைச் செலுத்தி மக்களின் வசதிக்காகவும், வாழ்வின் முன்னேற்றத்திற்காகவும் மின்சாரம் வழங்கி வருகிறது என்ற நல்ல பெயரை நமது அமைச்சர் அவர்கள் எடுத்து வருவதைக் குறித்து நானும், நான் சார்ந்து இருக்கிற திராவிட முன்னேற்றக் கழகமும் மகிழ்ச்சி அடைவதோடு, பாராட்டவும் கடமைப்பட்டுள்ளோம். இந்த அறிக்கையில் குறிப்பிட்டுள்ளது போல, மின்சார உற்பத்தி தமிழ்நாட்டில் வெகு வேகமாக முன்னேறிக்கொண்டு வருகிறது என்றாலும் இன்னும் சில கிராமங்கள் மின்சாரம் பார்க்காத நிலையில் இருக்கின்றன என்று நான் அமைச்சருக்குக் கூறிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

திட்டமிட்ட அளவைவிட அதிகப்படியான பம்ப்செட்களுக்கு மின்சாரம் வழங்கப்பட்டதாக அறிக்கையில் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. ஆனால், என்னுடைய தொகுதியில் பம்ப் செட்டுகளுக்கு மின்சாரம் தரப்படவேண்டுமென்று சிலர் மனுக்கள் கொடுத்திருக்கிறார்கள். சென்ற வருஷம் மேல்பாடி பிர்க்கா ஆந்திராவிலிருந்தது. அந்த பிர்க்காவிலிருந்து 21 பஞ்சாயத்துக்கள் இராணிப்பேட்டை தொகுதியில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. அந்த மேல்பாடி பிர்க்காவில் மின்சாரம் கொடுக்கப்படவேண்டி விவசாயிகள் மனுக்கள் கொடுத்திருக்கிறார்கள். இன்னும் அந்தப் பகுதிக்கு மின்சாரம் தரப்படாத காரணத்தால் அங்கு இருக்கிற விவசாயிகள் மிகவும் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள் என்பதை அமைச்சர் அவர்களுடைய கவனத்திற்கு உதவி சபாநாயகர் மூலமாகத் தெரிவிக்க கடமைப் பட்டிருக்கிறேன்.

எனக்கு முன்னால் பேசிய ஆளும் கட்சி நண்பர் ஒருவர் மரக் கம்பங்கள் போடுவதால் மிக ஆபத்து ஏற்பட்டிருக்கிறது என்று குறிப்பிட்டார்கள். ஆபத்து இருக்கிறது என்று மட்டும் அவர் சொல்லி முடித்துவிட்டார்கள். சென்ற மாதம் என்னுடைய தொகுதியில் ஆபத்தே நேர்ந்துவிட்டது என்று நான் அமைச்சரு

டைய கவனத்திற்குக் கொண்டுவருகின்றேன். குடிமல்லூர் கிராமத்தில் சென்ற மாதம் 7-ந் தேதியன்றிரவு 7-30 மணிக்கு மின்சார மரக் கம்பம் உடைந்து, மின்சாரக் கம்பி வழியில் இருந்த நேரத்தில், 45 வயதுடைய எல்லப்பன் என்பவரும், 14 வயதுள்ள அவருடைய மகன் பாலகிருஷ்ணன் என்பவரும், 42 வயதுடைய சந்திரசேகர முதலியார் என்பவரும், 500 ரூபாய் மதிப்புள்ள அவருடைய ஒரு ஜோடி மாடுகளும் உயிரிழந்திருக்கிறார்கள். அப்படி பாதிக்கப்பட்ட குடும்பங்களுக்கு நஷ்ட ஈடு தருமாறு அமைச்சர் அவர்களை நான் மிகவும் தாழ்மையுடன் கேட்டுக் கொள்கிறேன். மரக் கம்பங்களை மின்சார இலாகாவினர் உபயோகப்படுத்தக் கூடாது என்று ஆளும் கட்சி நண்பர்கள் சொல்லியிருக்கிறார்கள். அதையே நானும் வற்புறுத்துகின்றேன். இரும்புக் கம்பங்களை உபயோகப்படுத்துவதுதான் நல்லது என்று கூறி, இந்தச் சபையில் பேச எனக்கு வாய்ப்பு அளித்த உதவி சபாநாயகருக்கு என்னுடைய நன்றியைத் தெரிவித்துக்கொண்டு, விடை பெறுகிறேன். வணக்கம்.

* SRI A. R. SUBBIAH MUDALIAR : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, மின்சார ஸ்தாபனத்தின் 1962-63 ஆண்டுக்கான நிதி நிலை அறிக்கையின் பேரில் சில வார்த்தைகள் சொல்லப் பிரியப்படுகிறேன்.

சென்ற வருஷம் சில பகுதிகளில் க்ரூப் ஸிஸ்டம் எடுக்கப் பட்டிருக்கிறது. அதனால் விவசாயிகள் பெரும் நன்மை அடைந் தார்கள். அதற்கு மூல காரணமாக இருந்த அமைச்சர் கனம் திரு. ராமையா அவர்களுக்கும், பிரதம இன்ஜினியர் அவர் களுக்கும் என்னுடைய நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக 130 கோடி ரூபாய் மூலதனம் போட்டு நடத்தக் கூடிய போர்டுக்கு 1948-ம் வருஷ சட்டப்படி 'நானபிஷியல்' அங்கத்தினர்களைப் போடலாம் என்று இருந்தாலும் இன்று வரை போடப்படவில்லை. அதற்கு காரணம் தெரியவில்லை. கன்ஸல்டேட்டிவ் கவுன்சில் என்று வைத்து, ஆலோசனை சொல் வதற்குத்தான் அதில் ஒரு பொறுப்பு இருக்கிறது. இவ்வளவு மூல தனம் போட்டு நடத்தப்படக் கூடிய அந்த போர்டிலே நானபிஷியல் அங்கத்தினர்கள் இருந்தால் பல அரிய யோசனைகள் சொல்வதற்கு வாய்ப்பு ஏற்படும். அதற்கு வேண்டிய நடவடிக்கை எடுப்பது நலம் என்று நான் நினைக்கிறேன்.

அதேமாதிரி சென்ட்ரல் போர்டுக்கு நம்முடைய மாகாணத்தில் இருந்து பிரதிநிதி இல்லை. நம்முடைய மாகாணம் இந்தியாவி லேயே மின்சாரம் சம்பந்தப்பட்டமட்டில் நல்ல முன்னேற்றம் அடைந்திருக்கிறது. அதற்குக் காரணம் இப்போது இருக்கிற சீப்-என்ஜினியர்தான். இது தெரிந்து இருந்தும் சென்ட்ரல் போர்டுக்கு நம்முடைய ரெப்ரசென்டேடிவ் இல்லை. அதை வலியுறுத்தவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக சர்வீஸ் கனெக்ஷன் சம்பந்தமாக விவசாயத் துறைக்கு ஒருவித சலுகை ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. விவசாயக் கிணறுகள் இருக்கும் இடம் வரையில் மின்சாரக் கம்பிகளை இழுக்கச் செல்வதற்கு சர்க்கார் பொறுப்பிலேயே

[Sri A. R. Subbiah Mudaliar] [5th May 1962

சர்வீஸ் கொடுக்கப்படுகிறது. இதேமாதிரி சிறிய சிறிய பஞ்சாயத்துக்களுக்கும் பாதுகாக்கப்பட்ட குடி தண்ணீர் சப்ளை சம்பந்தப்பட்ட வரையில் இந்தச் சலுகை கொடுக்கப்படவேண்டும். ஆயிரம், ஐநூறு ரூபாய் உள்ள சிறுசிறு வருமானம் உள்ள பஞ்சாயத்துக்கள் ஆயிரம், இரண்டாயிரம் என்று சர்விஸ் கனெக்ஷன் சார்ஜ் கட்டுவதற்கு முடியாத நிலைமையில் இருக்கின்றன. அதுவும் 'த்ரீ பேஸ் லைன்' 3 phase line போகும்போது ஏற்படக்கூடிய செலவு அதிகமாக இருக்கிறது. ஆகவே அக்ரிகல்சருக்கு லோடு கொடுக்கிற மாதிரி நினைத்து ப்ரொடெக்டட் வாட்டர் சப்ளைக்கும் கொடுக்கவேண்டுமென்று சொல்லிக்கொள்கிறேன்.

பவர் சம்பந்தமாக மேட்டூர் அணையில் இருந்து வரும் தண்ணீரில் ஒரு ஜெனரேட்டர் வைக்கப்போவதாகத் தெரிகிறது. நம் நாட்டில் பல சிறு ஆறுகள் இருக்கின்றன. அந்தமாதிரியான ஆறுகளிலெல்லாம் ஜெனரேட்டர் வைப்பதற்குப் பரிசீலனை செய்தால் பவர் எடுப்பதற்கு வழி இருக்கும். உதாரணமாக, நாங்குநேரி தாலுக்காவில் நம்பியாறு என்று இருக்கிறது. சில வருஷங்களுக்கு முன்பு என்ஜினியராக இருந்தவர் அந்த ஆற்றைப் பரிசீலனை செய்து பார்த்து அங்கே ஒரு ஸ்மால் ஜெனரேட்டர் வைக்கலாம் என்று ரிப்போர்ட் அளித்திருக்கிறார். பம்பாறு என்று ஒரு சிறு ஆறு (Above upper Dam) அதில்கூட அருவி விழிவதாகத் தெரிகிறது. இங்கெல்லாம் கூட ஜெனரேட்டர் அமைப்பதற்கு முயற்சி எடுத்துக்கொண்டால் பவர் அதிகமாக உற்பத்தியாகக் கூடும்.

இதுபோக பிராஜெக்டுகளில் எல்லாம் நல்ல தோட்டங்கள் (பூங்கா) வைக்கப்படுகிறது. ஓய்வு நேரங்களில் அநேகம் பேர் போய் உட்கார்ந்துகொள்ள வசதியாக பொழுதுபோக்கும் இடங்களாக அமைந்து இருக்கின்றன. தனியாக ப்ளாஷ் லைட் போன்றவற்றுக்கு Main-ல் இருந்து பவர் எடுக்காது அங்கேயே தனியாக ஒரு செல்ப் சப்போர்ட்டிங் ஜெனரேட்டர் அமைக்கலாம். அதாவது அணைகளிலிருந்து வெளியே அனுப்பும் தண்ணீரில் இருந்து உற்பத்தி செய்யலாம்.

அதுபோக ஒயர், ஸ்விச் wires இவைகளை எல்லாம் ஸ்டான்டர்டைஸ் (Standardise) பண்ணவேண்டும். ஒவ்வொரு கம்பெனிகள் ஒவ்வொரு விதமாகச் செய்கிறார்கள். சில கம்பெனிகள் தரக் குறைவாகச் செய்துவிடுவதனால் உயிர்ச்சேதம் கூட ஏற்பட்டிருக்கிறது. ஆகவே அவை எல்லாம் ஒரேமாதிரியாக இருக்கும்படி கட்டுப்பாடு செய்யவேண்டும். இதுவரையில் வெளிநாடுகளில் இருந்து வரவழைக்கப்பட்டுக் கொண்டிருந்த ஸ்டார்ட்டர் எல்லாம் இங்கே உற்பத்தி செய்வதற்கு வழி செய்தால் குறைந்த விலையில் வாங்குவதற்கு வழியேற்படும்.

தனியாரிடம் இருக்கும் கம்பெனிகளை தேசியமயமாக்கவேண்டுமென்று பலர் சொன்னார்கள். அதைத் தனியாகப் பரிசீலனை செய்து நஷ்ட ஈடாகக் குறைந்த தொகை கொடுக்கக் கூடிய கம்பெனிகளையாவது உடனடியாக எடுத்துக்கொள்ளவேண்டும்.

5th May 1962] [Sri A. R. Subbiah Mudaliar]

உதாரணமாக செங்கோட்டை கம்பெனி இருக்கிறது. அது முதலிலேயே 60 ஆயிரம் ரூபாய் மூலதனத்துடன் தான் ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. கம்பெனி ஆரம்பிக்கப்பட்ட 4 வருஷங்களுக்கு எல்லாம் 50 ஆயிரத்திற்கு பழைய ஜெனரேட்டர்கள் கொடுக்கப்பட்டது. அவர்கள் இப்போது நம்மிடம் இருந்து மின்சாரம் வாங்கி விநியோகிக்கிறார்கள். இப்போது அங்கே இருக்கக் கூடிய பழைய சாமான்கள் எல்லாவற்றையும் கணக்கிட்டாலும் அவற்றின் மதிப்பு ரொம்பவும் குறைவாக இருக்கும். நாமினலாக நஷ்டஈடு கொடுத்து அதை எடுத்துக்கொண்டு விடலாம். அதோடு இன்றைய தினம் வளர்ச்சி அடைந்துகொண்டிருக்கிற தொழில்களுக்கு போதுமான சப்ளையை அவர்களால் கொடுக்க முடியவில்லை. அவர்களுடைய லைனில் பவர் லோட் குறைவாக இருக்கிறது. லைன் லீக்கேஜ் வேறு இருக்கிறது. அதனால் விஸ்தரிக்க முடியவில்லை. செங்கோட்டை முனிஸிபாலிட்டியில் கூட அதை உடனடியாக சர்க்கார் எடுத்துக்கொள்ளவேண்டுமென்று தீர்மானம் போட்டு அனுப்பியிருக்கிறார்கள். அந்தமாதிரி கம்பெனிகளை உடனடியாக எடுத்துக் கொள்ளவேண்டும்.

அதுபோக இப்போது எங்கேயாவது லைன் பெய்லாகிவிட்டால் உடனடியாகத் தகவல் கொடுக்கவேண்டுமென்றால் பத்து மைல், ஐந்து மைல் தூரம் சென்றுதான் போன் செய்யவேண்டியிருக்கிறது. போன் கனெக்ஷன் ஒவ்வொரு செக்ஷன் ஆபிசிலும் இருந்தால் உடனடியாகத் தகவல் கொடுத்து, குறைபாட்டை நீக்க முடியும் என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

சிப்பந்திகள், ஹெட்குவார்ட்டர்ஸைவிட்டு கிராமப் பகுதிகளில் சென்று வேலை செய்யக் கூடியவர்கள் வீடு இல்லாமல் கஷ்டப்படுகிறார்கள். ஆங்காங்கு வீடு கட்டிக்கொடுக்கக்கூடிய திட்டம் இருந்து வீடு கட்டிக்கொடுத்தால் செவ்வனே வேலை செய்ய வாய்ப்பு ஏற்படும். அத்துடன் அவர்களுக்கு சைக்கிள் அலவன்ஸ் கொடுக்கவேண்டும். ஒரு டிரான்ஸ்பார்மரில் இருக்கக்கூடிய கோளாறைக் கவனித்துவிட்டு இன்னொன்றுக்கு நடந்து செல்கிற சந்தர்ப்பம் ஏற்பட்டால் காலதாமதம் ஏற்படுகிறது ,உடனடியாக ரிப்பேர் பார்ப்பது கஷ்டமாக இருக்கிறது.

அதுபோக ஹரிஜனங்கள் காலனிக்காக 2 லட்சம் செலவழிக்கப்பட்டிருக்கிறது. இவ்வருஷத்தில் 1-½ லட்சம் ரூபாய் தான் ஒதுக்கப்பட்டிருக்கிறது. அது காணாது. அந்தத் தொகையை கொஞ்சம் அதிகமாக ஒதுக்கி வழி செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அதுபோக கனெக்ஷன் கொடுக்கும்போது ரொம்ப காலதாமதம் ஏற்படுகிறது. கிட்டத்தட்ட 6 மாதத்திற்குக் குறையாமல் ஏற்படுகிறது. அதை நிவர்த்தி செய்ய ஒரு வழிவகை காண வேண்டும்.

அதுபோக இந்த மின்சார போர்டின் வரவு-செலவுக் கணக்கை ஆடிட் செய்யும் பொறுப்பு சர்க்காரிடம் இல்லை. 130 கோடி ரூபாய் மூலதனம் போட்டு நடக்கக் கூடிய ஒரு ஸ்தாபனம் சம்பந்தமாக ஆடிட் பொறுப்பை அரசாங்கம் பே அண்டு அக்கவுண்ட்ஸ்

[Sri A. R. Subbiah Mudaliar] [5th May 1962

1.00 p.m. ஆபீஸில் தன் கண்காணிப்பில் வைத்துக்கொள்ளாமல் அவர்களிடமே விட்டு வைத்திருப்பது சரியாகாது. அரசாங்க கண்காணிப்பில் அதை வைத்துக்கொள்வது தான் நலம் என்று நினைக்கிறேன்.

ஊழியர்கள் சம்பந்தப்பட்டவரை—மேல் அதிகாரிகளிடத்தில் பொறுப்புணர்ச்சி அதிகம் ஏற்பட்டிருக்கிறது என்றாலும் கீழே இருக்கக்கூடியவர்களுடைய நடத்தை அவ்வளவு சுமுகமானதாக இல்லை. Board பொறுப்பில் என்று வந்தவுடன் அவர்கள் நடத்தை மாறியிருக்கிறது. அவர்களுடைய போக்கை சுமுகமான முறையில் திருப்புவதற்கு வழிவகை காணவேண்டும். ரயில்வேக்களில் இருப்பதுபோல் ஊழியர்கள் அதிகாரிகள் ஆகியவர்களுக்கிடையே லியசான் ஆபீசர் ஒருவரை நியமித்து அவ்வப்போது எழும் பிரச்சனைகளைக் கவனித்து தக்க முறையில் சுமுகமாக அந்த ஸ்தாபனம் நடைபெறச் செய்யவேண்டும். அத்துடன் ஒவ்வொரு ஜில்லாவுக்கும் ஒரு அட்வைசரி கமிட்டி மாதிரி அமைத்து கன்ஸ்யூமர்சுகளின் பிரதிநிதிகளை வைத்துக்கொண்டு அவர்களுடைய கஷ்டங்கள், குறைகள், வசதிகள் ஆகியவற்றை கவனிக்க ஏற்பாடு செய்தால் மிகவும் நன்றாக காரியங்கள் நடைபெறுவதற்கு வாய்ப்பு இருக்குமென்று தெரிவித்துக்கொள்கிறேன்.

* SRI T. KARCHA GOWDER : கனம் சபாநாயகர் அவர்களே, நமது தமிழ்நாட்டு அரசாங்கம் சமர்ப்பித்துள்ள 1962-63-ம் வருஷத்திய நிதி நிலை அறிக்கையை நாம் கூர்ந்து பார்த்தால், எவ்வளவு ஸ்திரமானது, வருங்கால முன்னேற்றத்திற்கு எவ்வளவு தூரம் வழி வகுக்கிறது என்பதை நாம் தெரிந்து கொள்ளலாம். குறிப்பாக, இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட இறுதியிலே நாம் உற்பத்தி செய்த மின்சாரத்தின் அளவு 571,000 கிலோவாட் என்று இருப்பது மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட இறுதியில் 1,131,000 என்ற அளவுக்கு உயரப்போகிறது. தனி நபர் உபயோகிக்கும் மின்சாரம் 1947-ல் 11 யூனிட்டாக இருந்தது இன்று 60 யூனிட்டாக உயர்ந்திருக்கிறது. மூன்றாம் திட்ட இறுதியில் அது 160 யூனிட்டாக உயரப் போகிறது.

இந்த அறிக்கையிலே, காபிட்டல் ரெசிப்ட்ஸ், ரெவின்யூ ரெசிப்ட்ஸ் ஆகிய இரண்டு வித வருவாய்த் துறைகளைப்பற்றிக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இந்த இரண்டு வகை வருவாய்த் துறைகளிலும் நாம் பெரும் முன்னேற்றத்தை அடைந்திருக்கிறோம். ரெவின்யூ ரெசிப்ட்ஸ் என்ற இனத்தில் 139.20 லட்சம் ரூபாய் வருமான அதிகமும், காபிட்டல் ரெசிப்ட்ஸ் என்ற இனத்தில் 242 லட்சம் ரூபாய் வருமானம் அதிகமும் காண்கிறோம். இவ்விதமாக நாம் எந்தத் துறையிலும் முன்னேறிக்கொண்டு வரும்போது எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் எதற்செடுத்தாலும் திட்டங்களில் முன்னேற்றத்தைக் காணோம் என்று குறை கூறிக்கொண்டு வருவதைப் பார்க்கும்போது, என்னுடைய ஞாபகத்திற்கு வருவது, இவர்கள் மிஸ் மேயோ என்ற அம்மையாரின் வாரிசாக இருப்பார்களோ என்பதுதான்.

5th May 1962]

SRI M. KARUNANITHI : On a point of order. அங்கத்தினர் அவர்கள், மிஸ் மேயோ அம்மையாரின் வாரிசுகள் என்று எதிர்க் கட்சி அங்கத்தினர்களைக் குறிப்பிடுவது, இந்தச் சபையின் கணணியத்தைக் காப்பதாகாது என்பதைக் கூறிக் கொள்ள விரும்புகிறேன்.

MR. DEPUTY SPEAKER : அப்படி ஒரு அபிப்பிராயம் சொன்னார்களே தவிர, அங்கத்தினர்களைக் குறைவாகக் கருதவில்லை.

SRI T. KARCHA GOWDER : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த தமிழ்நாட்டிலே முதன்முதலாக மின்சாரம் உற்பத்தி செய்த ஜில்லாவாசி என்ற ஒரு பெருமை எனக்கு இருக்கிறது. அந்த ஜில்லாவைப் பொறுத்த அளவில் உள்ள சில குறைகளை நான் எடுத்துக் கூற ஆசைப்படுகிறேன். அங்கத்தினர்களுக்கு வழங்கப்பட்டுள்ள 'உழவுக்கும் தொழிலுக்கும் மின்சாரம்' என்ற புத்தகத்தில் "சுமார் ஐம்பது அறுபது ஆண்டுகளுக்கு முன்பிருந்தே நமது தமிழ் மாநிலத்தில் மின்சார வசதி இருந்து வந்தது. ஆனால் அந்த வசதி நீலகிரி மலைப் பிராந்தியங்களிலுள்ள தேயிலைத் தோட்டங்களுக்கு மட்டுமே கிடைத்து வந்தது. நீலகிரி மலைப் பகுதியில் காட்டேரி என்ற இடத்தில் நீரிலிருந்து மின்சாரம் உற்பத்தி செய்து அதை அந்தச் சுற்றுப் பகுதியிலேயே பயன்படுத்தி வந்தார்கள்" என்று கூறப்பட்டிருக்கிறது. அந்தக் காட்டேரி அணை இன்று எந்த நிலையில் இருக்கிறது என்பதை நான் அமைச்சர் அவர்களுக்கு எடுத்துக் கூற விரும்புகிறேன். அது, சுற்றுப்புறத்திலுள்ள மண்ணினால் அரிக்கப்பட்டு தூர்ந்து போய் மின்சாரம் எடுக்க லாயக்கில்லாமல் இருக்கிறது. இதனை நான் கவர்னர் அவர்களின் உரை மீது பேசும்போதுகூட எடுத்துச் சொல்லியிருக்கிறேன். இப்போதுள்ள குந்தா மின்சாரத் திட்டப் பகுதிகளில்கூட மண்ணரிப்பு மிக வேகமாக ஏற்பட்டு வருகிறது. இவைகளை உடனடியாக நாம் கவனிக்காவிட்டால் 50 ஆண்டுகளுக்குப் பிறகு இந்த குந்தா திட்டத்திற்கும் காட்டேரித் திட்டத்திற்கு வந்த கதி ஏற்பட்டு விடும். ஆகவே, அது பற்றி உடனடியாகக் கவனிக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

குந்தாத் திட்டப் பகுதியில் அநேக விவசாயிகள் தாங்கள் விவசாயம் செய்யும் அருமையான பூமிகளை இழந்திருக்கிறார்கள். 'சப்மெர்ஜ்ட் எரியா, காச்மெண்ட் ஏரியா' என்ற பூமிகளை அவர்கள் இழந்திருக்கிறார்கள். இவர்களுக்கு நாளது வரையில் வேளாண்மை செய்ய எந்தவிதமான பூமியும் கொடுக்கப்படவில்லை. கனம் அமைச்சர் அவர்கள் இன்னும் இரண்டொரு நாட்களில் எங்கள் உதகைக்கு வருகிறார்கள். இந்தக் குந்தாத் திட்டத்திலே பூமியை இழந்தவர்கள் எவ்வளவு பேர், அவர்களுக்கு கம்பன்சேஷனாக பூமி கொடுக்க என்ன ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது என்ற தகவல்களை அவசரமாக அறிந்து அங்கு வரும் சமயத்தில் பிரதிநிதிகளை அழைத்து இதுபற்றி விவாதித்தால் நலமாக இருக்குமென்று நினைக்கிறேன். கிராம மின்சார உற்பத்திக்காகவும், விஸ்தரிப்புக்காகவும் சென்ற வருஷம் 728.83 லட்சம்

[Sri T. Karcha Gowder] [5th May 1962

செலவழித்திருக்கிறோம். ஆனால் இந்த ஆண்டு 447.26 லட்சம்தான் செலவு செய்யப் போகிறோம். இதில் முக்கியமாக கிராமப் புறங்களைக் கவனிக்கவேண்டும். நகரங்களில் இரவைப் பகலாக ஆக்கியிருக்கிறார்கள். கிராமப்புறங்களில் அவ்விதம் மின்சாரத் திட்டங்கள் விஸ்தரிக்கப்படவில்லை என்பதை வருத்தத்தோடு தெரிவித்துக் கொள்கிறேன்.

அடுத்து, பருவக் காற்று மிக அதிகமாக வீசும் எங்கள் ஜில்லாவில் மரக் கம்பங்களை நடுவதை உடனடியாக நிறுத்தவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

கிராமப் புறங்களில் சர்வீஸ் கனெக்ஷனுக்கு விண்ணப்பிக்கும் போது 50, 60 என்று முன் பணமாக தொகை வாங்கிக் கொள்ளுகிறார்கள். இவ்விதம் செலுத்த வேண்டிய முன் பணத்தை விவசாய மக்கள் ஒரே தவணையில் செலுத்த மிகவும் கஷ்டப்படுகிறார்கள். ஆகவே, இந்தத் தொகையை 12 மாதத் தவணைகளிலோ, 25 மாதத் தவணைகளிலோ சிறுகச் சிறுகக் கட்ட ஏற்பாடு செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொண்டு இந்தச் சந்தர்ப்பத்தை அளித்த சபாநாயகர் அவர்களுக்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

* SRI KANCHI MANIMOZHIAR : சட்டமன்றத் துணைத் தலைவர் அவர்களே, இந்த ஆண்டு மின்சார அமைச்சர் கொடுத்திருக்கிற நிதி நிலை அறிக்கையின் மீது காலையிலிருந்து விவாதம் நடந்து கொண்டிருக்கிறது. எங்கள் கட்சியைச் சேர்ந்தவர்களும், ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்களும் பல கருத்துக்களை எடுத்துக் கூறியிருக்கிறார்கள். இந்த மின்சாரத் திட்டத்தை மின்சார போர்டிடம் ஒப்படைத்து ஐந்தாண்டுக் காலம் ஆகிறது. இந்த போர்டைக் கலைத்து விட்டு மீண்டும் அரசாங்கமே எடுத்துக் கொள்ள வேண்டுமென்று ஆளும் கட்சி உறுப்பினர்கள் தெரிவித்திருக்கிறார்கள். நான் அந்த அளவுக்குப் போகாவிட்டாலும் மின்சார போர்டில் உத்தியோகப் பற்றற்றவர்கள் அங்கம் வகித்தால், செலவு வகையிலே தவறான போக்கில் செலவழிக்கப்பட்டால் எடுத்துக் காட்ட வசதியாக இருக்குமென்று கருதுகிறேன். பொதுவாக தமிழக சர்க்கார் இத்தகைய திட்டங்களையெல்லாம் தனி போர்டுகள் அமைத்து ஒப்படைத்து வருகிறார்கள். 'ஹவுஸிங் போர்டு' தனியாக அமைக்கப்பட்டு வீடு கட்டும் திட்டம் அவர்கள் கைகளிலே ஒப்படைக்கப் பட்டிருக்கிறது. அதிலே என்னென்ன குறைபாடுகள் இருக்கின்றன என்பது பற்றி அது சம்பந்தமான விவாதத்தின்போது பேசுகிறேன். இந்த மின்சார போர்டைப் பொறுத்தவரை உத்தியோகப் பற்றற்றவர்கள் அங்கம் வகிக்கவில்லை. உத்தியோகத் துறையைச் சேர்ந்தவர்கள் மட்டும் உறுப்பினர்களாக இருக்கும் காரணத்தால் பல குறைபாடுகளைச் சுட்டிக் காட்ட முடிவதில்லை. நல்ல அனுபவம் பெற்று ஓய்வு பெற்றவர்களையும் மற்றும் இந்த வகையிலே அனுபவம் உள்ள தனியார்களையும் இதிலே சேர்த்துக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

இன்றுள்ள போர்டில் பொதுவாக, சீப் என்ஜினியர், சீப் செகரட்டரி, பைனன்ஸ் செகரட்டரி இப்படி உத்தியோகத் தரப்பினரே இருக்கின்றனர். தனிப்பட்டவர்களும் அதில் சேர்க்கப்பட வேண்டும், அப்படி சேர்க்கப்பட்டால்தான் அவர்கள் தெரிவிக்கும் கருத்தையொட்டி என்னென்ன குறைபாடுகள் இருக்கின்றன என்பதை உணர வசதி ஏற்படும். வெளிநாடுகளில் தனிப்பட்டவர்கள் எவ்வளவு மின்சாரத்தை அனுபவிக்கிறார்களோ அந்தளவு தமிழகத்தில் மின்சாரம் ஒவ்வொருவருக்கும் கிடைக்கவில்லை என்று எங்கள் கட்சிச் செயலாளர் எடுத்துக் காட்டியபோது அதை மறுத்து ஆளும் கட்சியைச் சார்ந்த அம்மையார் அவர்கள், அவர்கள் நூறு ஆண்டு கால வளர்ச்சியில் இருக்கிறார்கள். நாம் 10 ஆண்டு கால வளர்ச்சியில்தான் இருக்கிறோம், ஆகவே அங்கிருப்பதைப்போல் இங்கு எதிர்பார்க்க முடியாது என்று சொன்னார்கள். இன்று ரஷ்யாவை எடுத்துக்கொண்டால் யுத்தத்தில் மின்நிலையங்கள் எல்லாம் அழிக்கப்பட்டு, பெரிய பெரிய தொழிற்சாலைகள் எல்லாம் அழிக்கப்பட்டு அங்கு ஒன்றுமே இல்லாமலாகி விட்டதைப் பார்த்திருக்கிறோம். பின்னர் சில ஆண்டுகளுக்குள்ளாகவே அங்கு எங்கு பார்த்தாலும் மின்சார வளர்ச்சி அடைந்திருக்கிறது. அங்கு மக்களின் தேவைக்கு மேல் மின்சாரம் கிடைத்துக் கொண்டிருப்பதைப் பார்க்கிறோம். தன் நாட்டை வளப்படுத்தி பிறருக்கும் மின்சாரப் பொருள்களைக் கொடுத்துக் கொண்டிருக்கிறார்கள். ஆக, மின்சாரத்தில் நாம் பெருமளவு வளர்ச்சி அடைந்திருந்தாலும் இன்னும் அதிகப்படியான வளர்ச்சி தேவை என்றுதான் எங்கள் செயலாளர் எடுத்துக் கூறினாரே தவிர வேறு ஒன்றுமல்ல. நமக்கு மின்சாரம் ஏராளமாக தேவையாயிருக்கிறது. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட இறுதியில் நாம் பெற இருக்கக்கூடிய மின்சாரத்தின் அளவையும் அதன் தேவையையும் கணக்கிட்டுப் பார்க்கும்போது 9 லட்சம் கி. வாட்ஸ் அளவிற்கு மின்சாரம் குறைவாகத்தான் இருக்குமென்று அறிக்கையில் எடுத்துக் காட்டப்பட்டிருக்கிறது. அதை நிறைவு செய்ய தமிழகத்தை மற்ற மாநிலத்தோடு இணைக்கப்படுகிற ஒரு திட்டம் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. மைசூரும் தமிழகமும் இணைகிற காரணத்தால் 8 லட்சம் கி. வாட்ஸ் கிடைக்குமென்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. அப்படிக் கிடைக்காலும் மேற்கொண்டு பற்றாக்குறைதான் இருக்கும் என்று அறிகிறேன். இன்றுள்ள கணக்கை மட்டும் வைத்துப் பார்த்தால் போதாது. விவசாயம் நாளுக்குநாள் பெருகிக்கொண்டே போகிறது. அதற்கான திட்டங்களை வகுத்துக்கொண்டே போகிறோம். விவசாயத்திற்கு பயன்படாத நிலங்களை விவசாயத்திற்கு பயன்படுத்த திட்டங்கள் வகுத்துக்கொண்டு போகிறோம். நமது மின்சாரத் தேவை நிச்சயமாக நாளுக்குநாள் வளர்ந்துகொண்டுதான் போகும். ஆக, இப்பொழுது கொடுக்கப்பட்டிருக்கிற திட்டப்படி ஒரு லட்சம் கி. வாட்ஸ் குறையும் என்று சொல்லும்போது வளருகிற விவசாயத்தைப் பார்க்கும்போது இன்னும் அதிகப்படியான கிலோ வாட்ஸ் நமக்குத் தேவையாகயிருக்கும். இதை எடுத்துக் காட்டும்போது மின்சார வளர்ச்சி இன்னும் வேண்டும்,

இப்பொழுதுள்ளது போதாது என்று சொல்கிறோமே தவிர சர்க்காரைக் குறை கூறவில்லை. இப்படிச் சொல்லும்போது ஆளும் கட்சியைச் சார்ந்த கச்சா கௌடர் அவர்கள், எங்களைப் பார்த்து எங்களுக்கு எப்பொழுதுமே குறை கூறுவதே வேலை, மேயோவை பின்பற்றுகிறவர்கள் என்று சொன்னார்கள். கவர்னர் உரை மீது பேசும்போது, திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சார்ந்தவர்கள் காமாலை நோய் பிடித்தவர்கள், ஆகவேதான் அவர்களுக்கு குறை மட்டும்தான் தெரிகிறது என்று சொன்னார்கள். அவர்களுக்கு கவர்னர் உரை மீது பேச கொடுக்கப்பட்ட பத்து நிமிடங்களில் எட்டு நிமிடங்கள் திராவிட முன்னேற்றக் கழகத்தைப் பழிப்பதிலும் இரண்டு நிமிடங்கள் தம் மாவட்டத்தில் செய்யப்படாத காரியங்களை எடுத்துக் காட்டியதைத்தவிர வேறு என்ன செய்தார்கள் என்று எனக்குப் புரியவில்லை. நாங்கள் இரண்டு நிமிடங்கள் குறை சொல்லி, மற்ற நேரத்தில் இன்னின்னது செய்யவேண்டுமென்று கூறுகிறோம். நாங்கள் காமாலை பிடித்தவர்கள் என்றால் அவர்கள் இரட்டைக் காமாலை நோய் பிடித்தவர்களாயிருப்பதால் தான் திராவிட முன்னேற்றக் கழகத்தினர் பேசும்போது அவர்கள் காமாலை நோய் பிடித்தவர்கள் போல் அவர்களுக்கு காணப்படுகிறார்கள். அவர் மேயோவின் நேரிடை வாரிசாக இருப்பதால்தான் எங்களைப் பற்றி குறை கூறிக்கொண்டே இருக்கிறார். ஆளும் கட்சி உறுப்பினர்கள் இம்மன்றத்தில் நல்ல கருத்துக்களை எடுத்துக்காட்டி மேலும் என்னென்ன செய்யவேண்டுமென்பதை எடுத்துக் காட்டவேண்டியதற்குப் பதிலாக திராவிட முன்னேற்றக் கழகத்தினரை இழித்துப் பழித்துப் பேசுவதிலேயே காலத்தைச் செலவழிக்கிறார்கள் என்று சொன்னால் உண்மையிலேயே என்னைப் போன்று புதிதாக இம்மன்றத்திற்கு வந்திருப்பவர்கள் வெளியே காங்கிரஸ் கட்சியினர் பேசும் அதே பேச்சுதான் இங்கும் இருக்கிறது; சட்டமன்றம் நடக்கிறது என்று என்னால் எண்ண முடியவில்லை. இப்படித்தான் எப்பொழுதுமே நடக்குமோ என்று எண்ணிக் கொண்டிருந்தேன். பழனிப் பிள்ளை அவர்கள் ஒன்று சொன்னார்கள்.

THE HON. SRI R. VENKATARAMAN : அங்கத்தினர் எலெக்ட்ரிஸிட்டியைப் பற்றி ஏதாவது பேசினால் எனக்கு உதவிகாமாயிருக்கும் என்று நினைக்கிறேன்.

SRI KANCHI MANIMOZHIAR : இப்பொழுது 85 % மின்சாரபோர்டாலும் மீதி 15% லைசென்ஸ் பெற்ற கம்பெனிகளாலும் மின்சாரம் விநியோகிக்கப்படுகின்றன. 85% நம் கைக்கு வந்த பின்னர் 15%-ஐ தனியாரிடம் விட்டு வைத்திருப்பதேன் என்று ஆளும் கட்சியைச் சார்ந்தவர்கள் கேட்டிருக்கிறார்கள். இந்த 8 தனிப்பட்ட லைசென்ஸ் கம்பெனிகளை சர்க்காரே எடுத்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். அதனால் சர்க்காருக்கும் ஏராளமான லாபமும் கிடைக்கும். தனிப்பட்ட கம்பெனிகளில் 10% யிலிருந்து 15% வரை அங்குள்ள மெம்பர்களுக்கு பங்கிடுதாப்படுகிறதென்று கேள்விப்படுகிறேன். வேலூர் கம்பனியில்

5th May 1962] [Sri Kanchi Manimozhiar]

10% க்கு மேல் லாபம் பங்கிடு தரப்படுகிறது என்று கேள்விப் படுகிறேன். கம்பெனிகளில் நிறைய லாபம் கிடைக்கிறது. சுப்பையா முதலியார் அவர்கள் கூட 60,000 ரூபாயில் தொடங்கப் பட்டதொரு கம்பெனி இன்று எவ்வளவோ லாபம் அடைந் திருக்கிறதென்று சொன்னார்கள். சர்க்காருக்கு வருவாய் தேவை என்று கூறுவதாலும், இந்தக் கம்பனிகளை சர்க்காரே ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று கூறுகிறோம். இதைக் கூறும் போது ஆளும் கட்சியைச் சார்ந்த சிலருக்கு ஆத்திரம் வருகிறது, அவசரமாக எங்களைப் பற்றி குறை கூறுகிறார்கள். வரி போடாமல் எப்படி நிர்வாகத்தை நடத்துவது என்று கேட்கிறார்கள். பழனிப் பிள்ளை அவர்கள் கூறும்போது . . . . (மணி அடிக்கப்பட்டது.) அதற்காகவே பஸ் ரூட்டுகளை எடுத்துக் கொள்ளவேண்டுமென்று சொல்லிக் கொண்டு வருகிறோம். பழனிப் பிள்ளை அவர்கள் கூட பெரிய பஸ் முதலாளிதான். அவர்கள் தன் லாபத்தில் ஒரு பங்கைச் சர்க்காருக்கு கொடுப்பார்களேயானால் பெரிய பஸ் முதலாளிகள் அவரைப் பின்பற்றி அதனால் சர்க்கா ருக்கும் நிறைய வருமானம் கிடைக்கும். இவைகளைக் கூறும் போது காமராஜ் ஆட்சியில் வடநாடு பார்க்க தென்னகம் நல்ல முறையில் வளரவேண்டுமென்பதற்காக கூறுகிறோமேயல்லாது குறை சொல்வதற்காக இங்கே வரவில்லை. இந்த மின்சார அறிக்கை மீது அதிகமாக பேசுவதற்கு இருந்தேனாயினும், நேரம் குறைக்கப்பட்டிருப்பதால் இத்துடன் முடித்துக் கொள்கிறேன்.

* **SRI S. RAMASAMY NAIDU :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, மின்சார சபையின் 62-63-ம் ஆண்டு நிதி நிலை அறிக்கை யைப்பற்றி பேசுவதற்கு முன்னால் மின்சாரத்துறையை மிகத் திறம்பட நிர்வகித்து வந்த அமைச்சர் ராமையா அவர்களையும், அத்துறையின் தலைமைப் பொறியாளராகயிருந்து பணியாற்றிய அப்பாதுரை அவர்களையும், அவர்களது சகாக்களையும் பாராட்ட கடமைப்பட்டுள்ளோம். மின்வேகத்தில் மின்சாரத்தை வழங்கும் பணியை மேற்கொண்டு அதை வழங்கி வந்த மின்சார போர்டாரின் சேவை மிகவும் பாராட்டத்தக்கது என்று சொல்வேன். மின்சாரம் வேண்டுமென்று நினைத்த கிராமங்களுக்கு எல்லாம் அது கிடைத்துக்கொண்டுதானிருக்கிறது. சில கிராமங்களில் இறவை சாத்தியமில்லாத இடங்களில், கிணற்றுப் பாசனம் இல்லாத இடங்களில் மின்சாரம் கொடுக்கக் கஷ்டப்படுகிறது. சில கிராமங் களில் முதலில் மின்சாரம் கேட்கும்போது பராமுகமாக இருந்து விட்டுத் திரும்பக் கேட்கும்போது மின்சாரம் கொடுப்பதற்கு அதிகம் செலவாகிறது என்பதால் தடைப்படுகிறதே தவிர நியாய மாக எல்லா இடங்களிலும் மின்சாரம் வழங்கப்படுகிறது என்பதைப் பார்த்து நாம் அவர்களைப் பாராட்டக் கடமைப் பட்டிருக்கிறோம்.

அதுமட்டுமல்ல, மின்சாரத்தை வழங்குவதில் ஏற்படக்கூடிய சிக்கல்களை எல்லாம் வேகமாக தீர்க்கிறார்கள், இவை யெல்லாம் மிகவும் பாராட்டக் கூடிய விஷயமாகும். எங்கேயாவது இடியின் காரணமாகவோ மின்னலின் காரணமாகவோ மின்சாரம்

தடைப்பட்டால், வேகமாக இந்த சபையின் ஊழியர்கள் சென்று ஐந்து அல்லது 15 நிமிடத்திற்குள் செப்பனிட்டு திரும்பவும் மின்சாரம் கிடைக்கும்படி செய்கிறார்கள் என்றால் உண்மையிலேயே இத்துறையில் வேலை செய்கின்றவர்கள் எத்தனை கரிசனமாக கவனித்துக்கொண்டிருக்கிறார்கள் என்பதை தெளிவாகக் காட்டுகிறது. ஆகவே வேலை செய்கிறவர்களை நாம் பாராட்டுவது மிகவும் முக்கியமான கடமை என்ற முறையில் இத்துறையில் வேலை செய்கின்றவர்கள் அனைவரையும் நாம் பாராட்டுகின்றோம். மின்சாரம் இன்றைக்கு அதிகமாக எல்லாத் துறைகளிலும் தேவைப்படுகின்றது. மின்சாரம் அதிகமாக வழங்கப்பட்டு வந்த போதிலும் கூட, விவசாயத்துக்கு குறைந்த சதவிகிதமே மின்சாரம் உபயோகப்பட்டு வருகிறது. விவசாயிகளுடைய வருமானத்தில் இதன் காரணமாக பல சிக்கல்கள் ஏற்படுகின்றன என்பதை சபையின் கவனத்திற்கும் கனம் அமைச்சர் அவர்களின் கவனத்திற்கும் கொண்டுவர விரும்புகிறேன். சாதாரணமாக ஒரு தாலூகாவில் மின்சாரத்தை சாதரா செய்வதற்கு பரிசீலிக்கும் போது, மனுப்போட்டிருக்கும் இடங்களை மட்டும் கணக்கிலெடுத்துக்கொண்டுதான் திட்டத்தை போட்டு விடுகிறார்கள். அப்படியில்லாமல், ஒரு தாலூகாவை எடுத்துக்கொள்ளும்போது அந்த தாலூகாவில் விவசாய அபிவிருத்திக்கு மின்சாரம் எந்த அளவுக்கு பயன்படும் என்பதையும், இதன் மூலம் பக்கத்திலுள்ள கிராமங்களுக்கும் தேவைப்படுமா என்பதையும் கணக்கிலெடுத்து, அதன் அடிப்படையில் பரிசிலித்து திட்டத்தைப் போட்டு மின்சாரத்தை வழங்கினால் பின்னால் மின்சாரம் கேட்பவர்களுக்கு கொடுப்பதற்கு வசதியாக இருக்கும். உதாரணமாக, எட்டு மைல் தூரத்திலுள்ள ஒரு இடத்திற்கு மின்சாரம் வேண்டும் என்று கோரியிருந்தால், அந்த எட்டு மைல் தூரத்தில் இருக்கும் இடத்திற்கு மட்டும் மின்சாரத்தை வழங்குவதற்கு ஆகும் செலவு என்ன, அதற்கான முதலீட்டுக்கும் வருமானத்திற்கும் சரியாக இருக்குமா என்பதை மட்டும் கவனத்தில் எடுத்துக்கொண்டு திட்டத்தைப் போட்டு மின்சாரத்தை கொடுக்கிறார்கள். அதற்கப்பால், அந்த எட்டு மைல் தூரத்திலிருந்து ஒரு நான்கு பர்லாங் அல்லது ஒரு மைல் தூரத்திலிருக்கும் ஒரு இடத்திற்கு மின்சாரம் வழங்க வேண்டும் என்று கோரிக்கை வரும்போது, லைன்கள் மாற்ற வேண்டும், கம்பிகள் எல்லாம் மாற்றப்படவேண்டும். இதன் காரணமாக செலவு அதிகமாகும் என்று சொல்லுகிறார்கள். ஆகவே இம்மாதிரிப்பட்ட சந்தர்ப்பத்தில், டெவலப்மெண்ட்-க்கு வழங்குவது என்று தீர்மானிக்கும்போது, ஒரு தாலூகாவை எடுத்துக் கொண்டால், பக்கத்திலுள்ள இடங்களில் எத்தனை இடங்களுக்கு கொடுக்கவேண்டியிருக்கும் என்பதை கணக்கிலெடுத்து, பின்னால் சாதரா செய்யப்போகும் இடங்களையும் கணக்கிலெடுத்து, அவற்றை எல்லாம் பரிசீலித்து, அதற்குத் தக்கவாறு ஒரு சப்-ஸ்டேஷனை அமைத்து மின்சாரத்தை வழங்கினால், பின்னால் கேட்கும்போது, அந்த சப்-ஸ்டேஷனிலிருந்து மின்சாரத்தை கொடுப்பதற்கு வசதியாக இருக்கும். ஆகவே தனித்தனியாக கோரிக்கைகளை எடுத்துக்கொண்டு கவனிக்காமல் மொத்தமாக பக்கத்திலுள்ள இடங்களுக்கும் எவ்வளவு தேவைப்படும்

5th May 1962] [Sri S. Ramasamy Naidu]

என்பதையும் பார்த்து அதற்குத் தகுந்தவாறு பரிசீலனை செய்ய வேண்டும். முதலாவதாக எட்டு கிணறுகளுக்கு மட்டும் மின்சாரம் கொடுக்கவேண்டும் என்று கேட்டால், அந்த எட்டு கிணறுகளுக்கு மட்டும் ஆகும் செலவு, வருமானம் இவைகளை மதிப்பிட்டு திட்டத்தை தயார் செய்து, அதன் அடிப்படையில் மின்சாரத்தை கொடுத்துவிடுகிறார்கள். அதன் பின்னால் ஒன்பதாவது கிணற்றுக்கு மின்சாரம் கொடுக்கவேண்டும் என்று கேட்கும்போது மறுபடியும் கம்பிகள் எல்லாம் மாற்றவேண்டும், இரண்டாம் நிலை கம்பிகளாய் இருப்பதை நாலாம்நிலை கம்பிகளாய் போட வேண்டும் என்றெல்லாம் சொல்லுகிறார்கள். இவைகளைப் பார்க்கும்போது அந்த ஒன்பதாவது கிணற்றுக்கு மின்சாரம் கொடுப்பது சாத்திய மில்லாமல் போய்விடுகிறது. பத்து கஜத்தில் இருந்தாலும் கூட இந்த நிலைமை ஏற்பட்டுவிடுகிறது. ஆகவே முதலில் சாதரா செய்யும்போது கிராமத்தில் எத்தனை கிணறுகளுக்குத் தேவைப் படும் என்று மதிப்பிட்டு, அந்த இடத்தில் 25 கிலோவாட்ஸ் டிரான்ஸ்பார்மர் தான் தேவைப்படுகிறது என்றிருந்தாலும், அதில் 50 அல்லது 100 கிலோவாட்ஸ் டிரான்ஸ்பார்மரை நிறுவி, அதற்குத் தகுந்தவாறு கம்பிகளை எல்லாம் போட்டு வைத்திருந்தால், பின்னால் பக்கத்திலிருந்து கேட்கும் போது மின்சாரத்தை கால தாமதமின்றி கொடுப்பதற்கு வசதியாக இருக்கும். ஆகவே இதைப்பற்றி மின்சார சபை தக்க நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

இது தவிர விவசாயிகளுக்கு நடைமுறையில் சில கஷ்டங்கள் இருக்கின்றன. அதாவது மின்சாரம் சாதரா செய்வதில் மூன்று வித கியாரன்டிகள் இருக்கின்றன. அதாவது, டாரிப் கியாரன்டி, சாதாரண கியாரன்டி, ஸ்பெஷியல் கியாரன்டி என்று இருக் கின்றன. டாரிஃப் கியாரன்டியில் ஏற்கனவே மின்சாரம் பக்கத்தில் போய்கொண்டிருந்தால், அதிலிருந்து எடுத்துக் கொள்வதற்கு கொடுக்கப்படுவது, சாதாரண கியாரன்டி என்பது 30 முதல் 35 ரூபாய் வரைக்கு உபயோகிப்பது, ஸ்பெஷியல் கியா ரன்டி என்பது கிணறுகளுக்கு கொடுக்கப்படும் மின்சாரத்தைக் கணக்கிட்டு, ஒரு குதிரை வேகத்திற்கு 50 ரூபாய் என்று கணக் கிட்டு அதற்குத் தகுந்தவாறு கொடுப்பது. இப்படி மூன்று வித கியாரன்டிகள் இருக்கின்றன. விவசாயிகளைப் பொறுத்தவரையில் மின்சாரத்தை தேக்கி வைத்திருந்தால், எப்போதுமே சாதாரண கியாரன்டியின் பேரில் சாதரா செய்ய முடியும். கனம் அமைச்சர் அவர்களும் விவசாயிகளுக்கு குறைந்த விகிதத்தில் மின்சாரம் கொடுத்தாலும் அது அத்தியாவசியமான உணவு உற்பத்திக்கு பயன்படுகிறது என்று சொல்லியிருக்கிறார்கள். அதை நான் வர வேற்கிறேன். அந்த எண்ணத்தை அடிப்படையாகக் கொண்டு மின்சார விநியோகத்தை கவனிக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். சாதாரணமாக மின்சாரத்தை விவசாயத்திற்கு பயன்படுத்துவதற்கு முன்னால் 100 ஏக்கர்கள் விவசாயம் செய்யப் பட்டது என்றால், மின்சாரத்தை உபயோகத்திற்கு கொண்டு வந்ததின் பின்னால் 400, 600 என்றும், சில இடங்களில் 1,000 ஏக்கர் வரையிலும் விவசாயம் செய்யப்படுகிறது. அதே நேரத்தில்

விவசாயப் பெருக்கத்தின் காரணமாக உணவு உற்பத்தியும் அதிகமாகயிருக்கிறது. ஆகவே இப்போது விவசாயிகளுக்கிடையில் இருக்கும் இந்த மூன்று வித கியாரன்டிகளையும் மாற்றி, ஒவ்வொரு பிரதேசத்திற்கும் மொத்தமாக எந்த அளவுக்கு மின்சாரம் கொடுக்கவேண்டும் என்பதையும் கணக்கிலெடுத்து, அதற்கு தகுந்தவாறு திட்டங்களை பரிசீலனை செய்ய வழிவகை செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இன்றுள்ள நிலையில் கிராமத்திலுள்ள விவசாயிகள் எல்லாம் மின்சாரத்தை மிகவும் அதிகமாக நம்பியிருக்கிறார்கள். குறைந்த அளவு தண்ணீர் இருந்தால் கூட அதை மின்சாரத்தின் மூலம் இறைக்கவேண்டும் என்று ஒவ்வொரு விவசாயியும் ஆசைப்படுகிறான். ஏனென்றால் மாடுகளை உபயோகித்து தண்ணீர் இறைக்கவேண்டும் என்றால் இன்றுள்ள நிலையில் எவ்வளவோ கஷ்டங்கள் இருக்கின்றன. மாடுகள் வாங்க 1,000 ரூபாய்க்கு மேல் ஆகிறது. தண்ணீர் இறைப்பதற்கு இரண்டு பேர் வேலை செய்யவேண்டியிருக்கிறது. அதே நேரத்தில் மின்சாரத்தின் மூலம் தண்ணீர் இறைப்பதில் நான்கில் ஒரு பங்கு கூட தண்ணீர் வருவதில்லை. இந்தக் காரணங்களினால் எப்படியும் மின்சாரத்தைப் பெற வேண்டும் என்று விவசாயிகள் ஆசைப்படுகிறார்கள். ஆகவே இன்றுள்ள நிலையில் உணவு உற்பத்திக்கு மின்சாரம் மிகவும் அவசியமாக இருக்கிறது. இதைக் கருத்தில் கொண்டு ஒவ்வொரு இடத்திற்கும் மின்சாரத்தை கொடுக்கும் போது ஒரு குறிப்பிட்ட இடத்திற்கு என்று மட்டுமில்லாமல் பக்கத்திலுள்ள இடங்களுக்கும் கொடுக்கக்கூடிய முறையில் திட்டத்தைப் போட்டு அதற்குத் தகுந்தவாறு லைன்களைப் போட்டு மின்சாரத்தை உபயோகப்படுத்துவது நல்லது என்பதை மின்சார போர்டாரின் கவனத்திற்கு கொண்டு வர விரும்புகிறேன். கனம் அமைச்சர் அவர்களும் இதைப்பற்றி பரிசீலிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

மேலும் மின்சார போர்டிலிருந்து மின்சாரம் வேண்டும் என்று கேட்கும் காலத்தில் நிர்வாக முறைகள் பலமாதிரியாக இருக்கின்ற காரணத்தால் சாதாரண ஏழை விவசாயிகள் பல கஷ்டங்களுக்கு ஆளாகிறார்கள். மின்சாரம் வேண்டும் என்று மனு செய்திருக்கும் ஒரு விவசாயி அதைப்பற்றி யாரிடத்தில் போய் கேட்பது என்று தெரியாமல் சும்மா இருந்து கொண்டிருக்கிறான். கமர்ஷியல் செக்ஷன், ஓ. அண்டு எம். எல். செக்ஷன், கன்ஸ்ட்ரக்ஷன் செக்ஷன் என்று பலவிதமான செக்ஷன்கள் இருக்கின்றன. தான் மனுசெய்திருந்த விவரத்தைப்பற்றி கேட்டால், "உன் மனு வேறொரு ஆபீஸுக்கு அனுப்பப்பட்டிருக்கிறது, அங்கே போய் கேட்டுக்கொள்" என்று சொல்லிவிடுகிறார்களே தவிர, சம்பந்தப் பட்ட அதிகாரிக்கு உடனே தாக்கீது அனுப்பி இதன் பேரில் என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது என்று கேட்டால் பிரயோஜனகரமாய் இருக்கும். சாதாரணமாக சட்டசபை அங்கத்தினர்கள் மின்சார தேவைகள் சம்பந்தமாக தகவல் கேட்கும்போது, இன்னின்ன இடத்திலுள்ள இன்னின்ன அதிகாரிகளுக்கு அனுப்பப்பட்டிருக்கிறது என்று சொல்லி விட்டு, அவர்களிடம் நீங்கள் தொடர்பு கொள்ளுங்கள் என்று சொல்லிவிடுகிறார்

கள். அப்படியில்லாமல் சம்பந்தப்பட்ட அதிகாரிகளிடத்தில் நீங்கள் இதன் பேரில் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறீர்கள் என்று கேட்கக்கூடிய முறையை தற்போது உடனடியாக ஜில்லா அளவுக்காவது ஏற்படுத்தவேண்டும் என்று தலைமை பொறி வல்லுனர். அவர்களை இந்தச் சபையின் மூலமாக கேட்டுக்கொள் கிறேன். கிராம விவசாயிக்கு இன்றைக்கு இருக்கும் இந்த அவல நிலை மாறுவதற்கு ஏதாவது வழிவகை செய்யவேண்டும் என்றும் கேட்டுக்கொள்கிறேன். விவசாயிகளுக்கு இன்னொரு கஷ்டமும் இருக்கிறது. கியாரன்டி தொகை அதாவது பொறுப்புத்தொகை 250 ரூபாய் செலுத்தவேண்டியிருந்தால் 55 ரூபாய் அல்லது 60 ரூபாய் செலுத்தியபின் ஏதாவது ஒரு மாதத்திற்கு கட்டணம் வந்திருக்கும்போது பாக்கித் தொகையையும் அதே மாதத் திலுள்ள பில்லில் சேர்த்து விடுகிறார்கள். இதைப்பற்றி நான் தலைமைப்பொறிவல்லுநர் அவர்களிடம் சொல்லியிருக்கிறேன். பாக்கித் தொகையையும் அதில் சேர்க்காமல் தனியாக டிமான்ட் செய்யுங்கள் என்று கேட்டிருக்கிறேன். அதை இதுவரையிலும் மேற்கொண்டதாகத் தெரியவில்லை. இதைப்பற்றியும் அவர்கள் கவனிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

இன்னொன்று, விவசாயிகளிடமிருந்து வசூல் செய்வதற்கு ஒவ்வொரு ஊரிலும் வசூல் துறை ஒன்று இருக்கிறது. அதிலிருந்து விவசாயிகளுக்கு ஒரு பாஸ்-புக் மாதிரி கொடுத்து ஒவ்வொரு மாதமும் கொடுத்த பணத்தை இதில் வரவு வைத்து கொடுத்துவிட்டால், விவசாயிகளுக்கு தங்கள் பணத்தின் கணக்கைப் பார்த்துக் கொள்வதற்கு வசதியாக இருக்கும் என்பதை சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இந்த முறையில் மின்சார சபையானது விவசாயிகளுக்கு நல்ல முறையில் பலன் அளிக்கக்கூடிய முறையில் சேவை செய்யவும், இந்த நாட்டில் அதிக அளவில் தொழில்கள் பெருகவும் உறுதுணையாக இருக்கும் என்று நம்புகிறேன். தொழில் அமைச்சர் அவர்களே இப்போது மின்சார அமைச்சராகவும், பொறுப்பேற்றிருக்கிறார்கள். ஆகவே தொழில்களிலே விவசாயம் பிரதானத் தொழிலாகையால் இவர் களுடைய காலத்தில் விவசாயத் தொழில் மிகவும் முன்னேற்ற மடையும் என்றும், அதற்கு இந்த மின்சார சபையானது உதவி யாக இருக்கும் என்றும் நம்புகிறேன். அதோடு தொழிலுக்கு என்று கொடுக்கப்படும் மின்சாரம் தனியாகப் பிரிக்கப்பட வேண்டும், கோயம்புத்தூர், சென்னை, மதுரை போன்ற இடங்களில் மின்சாரத்தை தனியாக வழங்கிவிட்டு, விவசாயிகளுக்கு அதனால் எந்தவிதமான குறைவும் ஏற்படாமல் பார்த்துக்கொள்ளவேண்டும் என்று அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொண்டு என் வார்த்தை களை முடித்துக்கொள்கிறேன்.

**MR. DEPUTY SPEAKER** : சபை இத்துடன் கலைந்து, மீண்டும் மே 7, 1962 திங்கட் கிழமை காலை 8-30 மணிக்கு கூடும்.

The House then adjourned.